20 பக்கங்கள்

REG. No. M. 3886

# ஜனசக்தி

(சோஷியலிஸ்ட் வாரப் பத்திரிகை)

ஆசிரியர் :—ப. ஜீவானந்தன்.

| மாலை 1 | சென்னை, சனிக்கிழமை, 30—7—'38 | மலர் 17 |
|---|---|---|

## திருவிதாங்கூர் அடக்குமுறைக் கண்டனம்




திருவிதாங்கூர் சர்க்கார் திருவனந்தபுரத்தில் மாணவர்கள் மீது தடியடிப்பிரயோகம் செய்ததை கண்டிப்பதற்காக சென்னை மாணவர்கள் நடத்திய பெரியதோர் ஊர்வலத்தின் காட்சி.

"திருவிதாங்கூர் அடக்கு முறை" என்று எழுதப்பட்டிருக்கும் பொம்மை முடிவில் நெருப்பிலிட்டு சாம்பலாக்கப்பட்டது.

வருடச் சந்தா
ரூ. 3.

தனிப்பிரதி
அணா 1.

# பாண்டிச்சேரியில் போலீஸ் அட்டகாசம்

சென்ற 1937-ம் ஆண்டுமேமீ புதுச்சேரியில் எனது மாமனார் இறந்ததை முன்னிட்டு நான், எனது மனைவி, பிள்ளை ஆகிய மூவருடன் அங்கு சென்று எனது மனைவிக்குப் ப்ாத்யமுள்ள ரெங்கப்பிள்ளை தெரு 77 நெ. இல்லத்திலேயே தங்கி எனது மாமனாருக்குரிய கிரியைகளை முடித்தோம். அவ்வூர் பிலிப்பு ரிஜிஸ்டர் ஆபீஸில் பதிவு செய்திருக்கிற 10000 ரூபாய்க்கு மேற்பட்ட பொருமானமுள்ள நகைகளும் இதர சொத்துக்களும் அவ்வீட்டிலுள்ள சில அறைகளுக்குள் முத்திரை வைத்திருப்பதற்கு எனது மாமனாரை மற்ற பாகஸ்தர்கள் சம்மதம் பெற்று காவலாளராக நியமித்திருந்தார்கள். அது, இதர சொத்துக்கள் இவைகளைப் பெற்றுக் கொடுப்பான் வேண்டி எனது மனைவி, மச்சிகள் இருவர், ஷை யார்கள் கணவன்கள், இவர்கள் இஷ்டப்படி அவர்களிடம் நான் அதிகாரப் பத்திரம் பெற்றேன். 9-9-'28 எனக்கு அவ்வூரில் விவாகம் நடந்தது. தோழர் வி. சுப்பையா என்பவரை 8 வருஷங்களாக நான் அறிவேன். நான் இருப்பதற்குப் பக்கத்துத் தெருவில் அவருடைய வீடு. வக்கீல் திரு மரிசவரி 14 வருஷங்களாக எனது மாமனார் குடும்பத்திற்கு வக்கீலாக உள்ளவர். ஷை யாரை வக்கிலாகக்கொண்டு புதுவையிலுள்ள எனது குடும்பப் பாக பிரிவினை வழக்கை நடத்தி வந்தேன். 2-7-33ல் சுமார் 10-30 மணிக்கு தோழர் வி. சுப்பையா வீட்டிற்குச்சென்றிருந்தேன். 7,8 வெள்ளையர்களும் இரண்டொரு கருப்பர்களுமாக திடீரென்று வீட்டிற்குள்புகுந்து வீட்டின் நாலபாகங்களையும் திறந்தும் உடைத்தும் சோதித்து பிறகு வீட்டிற்குள்ளிருந்த சுமார் ஏழெட்டு ஆட்களையும் ஒவ்வொருவராக அங்கேயே விசாரித்தார்கள். என்னை டெக்ளரேஷன் செய்திருக்கிறாயா என்று கேட்டார்கள். 1936-ம் ஆண்டில் நான் இங்கு வந்திருந்தபொழுது பெரிய கடை போலீஸ் என்னை டெக்ளரேஷன் செய்து கொள்ள விரும்பியபடி செய்து கொண்டேன்; ரசீது பெறுவதற்கு நாலைந்து தினங்கள் வரை தினமும் சென்று கேட்டேன். சால் சாப்பு சொல்லிக் கொண்டே வந்தார்கள். அவசரமாக நான் எனது சொந்த ஊருக்குப் போக வேண்டி நேர்ந்ததால் அப்பொழுதும், பிறகும் நான் ரசீதுபெறுவதற்குமார்க்கமில்லை என்றேன். என்னைமட்டும் இரண்டு வெள்ளையர்கள் ஒரு காரில் அவர்கள் காலடியில் உட்காரச் செய்து செண்டரல் போலீஸ் ஸ்டேஷனில் கொண்டு வந்து விட்டு சென்று விட்டார்கள். ஓர் அறைக்குள் என்னை நுழையச் செய்தபோது பத்துக்கு மேற்பட்ட போலீஸ்காரர்கள் இருந்தார்கள். சப் இன்ஸ்பெக்டர், ஹெட் கான்ஸ்டேபிள் முதலிய போலீஸ்காரர்கள், "நீ சுப்பையாவிற்கு பாடிகார்டல்லவா" என்று சொல்லிச்சொல்லி, மாறி, மாறி கழுத்திலும் முதுகிலும் தடியாலும்,கையாலுமாக சுமார் இருப்பதுஅடிக்குமேல் அடித்தார்கள், கொஞ்சநேரம் மூர்ச்சையற்றுக் கிடந்து பிறகு மூர்ச்சை தெளிந்தேன். கொஞ்ச நேரத்திற்குப் பிறகு அங்குள்ள மற்றொரு அறைக்கு என்னை அழைத்து, "ஆளைப்பாரடா" "ஏண்டா! சுப்பையா ஆளடா," என்று என்னைக் கேலி செய்துகொண்டே என்னுடைய சொந்த ஊர், நிலைமை முதலியவைகளைப் பற்றி ஒருவர் கேட்டார். தஞ்சாவூர் ஜில்லாவில் திருச்சினம்பூண்டி என்பது என்னுடைய சொந்த கிராம மென்றும் தற்சமயம் எனக்கு இரண்டு ஏக்கர் நிலந்தான் இருக்கிறது அதன் வரும்படியைக் கொண்டு தான் ஜீவித்து வருகிறேனென்றும் 1931ல் கள்ளுக்கடை மறியல் சம்மந்தப்பட்டவனென்று திருக்காட்டுப்பள்ளி போலீஸ் ஸ்டேஷனில், ஒருநாள் லாக்கப்பில் இருந்திருக்கிறேனென்றும், மேலே தெரிவித்திருக்கிறபடி இங்கு இதற்காக வந்திருக்கிறேனென்றும் தெரிவித்தேன். இரண்டு நாள்களில் எனது கையெழுத்தைவாங்கிக்கொண்டு அன்றிரவு அங்கேயே விலங்கிட்டு லாக்கப்பில் வைத்திருந்து மறுநாள் காலை சுமார் 10 மணிக்கு மாஜிஸ்டிரேட் கோர்ட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு ஓர் அறையிலிருந்த ஒரு வெள்ளையர் என்னை "வீட்டிற்குப்போ," என்றார். நான் எங்கள் வீட்டிலிருக்கும்பொழுது 7-7-38 மாலை 5 மணிக்கு பெரிய கடை போலீஸுக்கு வரவேண்டுமென்று ஒரு போலீஸ்காரர் என்னை அங்கு அழைத்துச் சென்றார். "இந்த க்ஷணமே நீ ஊரைவிட்டுப் போய்விடவேண்டுமென்றும், தவறினால் ஒரு வருஷ தண்டனை உண்டென்றும், கவர்னர் உனக்கு உத்திரவு போட்டிருப்பதால் உடனே போய்விடு என்று ஒரு நாளில் எனது கையெழுத்தை வாங்கிக்கொண்டு கவர்னர் உத்திரவு இது என்று என்னிடம் ஒரு தாளைக் கொடுத்தார். அங்கிருந்த ஒரு சப்இன்ஸ்பெக்டர் பிறகு நேரே எனது வக்கீல் வீட்டிற்குப் போய் உத்திரவைக் காட்டினேன். "என்ன செய்வது உடனேபுறப்படுஎன்று சொன்னார். பலவித கஷ்ட நஷ்டங்களைக்கிடையே அன்று மாலை 6-30 மணிக்கு அவ்வூரை விட்டு புறப்பட்டு எங்கள் ஊர் வந்தோம். எனது தேக அசௌக்யம் காரணமாக இதை இவ்வளவு தாமதமாக நான் தங்களுக்குத் தெரிவிக்க முற்பட்டேன்.

**த. குழந்தைவேலன்.**

—:o:—

## திருவிதாங்கூரில் அடக்குமுறை சென்னை மாணவர்கள் கண்டனம்

24-7-38 ஞாயிற்றுக் கிழமையன்று சென்னை நகரெங்கும் பெரிய பரபரப்பு காணப்பட்டது. காரணம் சென்னை மாணவர்கள் ஜெயாமன்ஷன்விலிருந்தும், ராயபுரம் ஹாஸ்டலிருந்தும் இன்னும் நகரத்தின் பல பகுதிகளிலிருந்தும்,'திருவிதாங்கூர் அடக்குமுறை ஒழிக, சமஸ்தான ஏதேச்சாதிகாரம் ஒழிக,' சுதந்திரம் நீடூழி வாழ்க, வேண்டாத சமஷ்டி ஒழிக என்ற கோஷம் வானைப்பிளக்க கோஷித்துக்கொண்டு தேசியக் கொடிகளுடன் புறப்பட்டு நேப்பியர் பார்க் வந்தடைந்தனர். அங்கிருந்து சர் சி. பி. ராமசாமி ஐயர் போன்ற ஒரு பொம்மையுடன் ஊர்வலமாக புறப்பட்டு ஊர்வலம் காங்கிரஸ் மண்டபம் சென்று முடிவடைந்தது. பொம்மைமீது "திருவிதாங்கூர் அடக்குமுறை" என்று எழுதப்பட்டிருந்தது. கூட்டத்திற்கு தோழர் டி. வி. எ. ராமானுஜம் தலைமைவகித்தார். கூட்டத்தில் திருமலை ராவ் (மெடிகல் காலேஜ் மாணவர்) ஆப்ரஹாம் (திருவிதாங்கூர் போலீஸ் தடியடிக் கிரையாகிய மாணவர்) எ. ஜி. வெங்கிடாச்சாரி ராஜமாணிக்கம் முதலியோர், சமஸ்தான காங்கிரஸை ஆதரித்தும், சர். சி. பி.யின் நடவடிக்கைகளைக் கண்டித்தும், மாணவர்கள்மீது தடியடிப் பிரயோகம் செய்ததைக் கண்டித்தும், மாணவர்கள் கண்டிப்பாக அரசியலில் ஏன் பங்கு கொள்ள வேண்டுமென்பதை விளக்கியும் பிரசங்கம் செய்தனர். பின் கூட்ட முடிவில் சென்னை மாகாண மாணவர் சங்கத்தின் பொதுக் காரியதரிசி தோழர் பி. வி. ராமசந்திர ரெட்டி வந்தனோபசாரம் கூறினார். இக்கூட்டம் மாகாண மாணவர் சங்கத்தின் சார்பில் நடைபெற்றது.

இறுதியில் அப்பொம்மை நெருப்பிலிடப்பட்டு நன்றாக சாம்பலாக்கப்பட்டது. அதன் மீது அங்குகூடியிருந்த அத்தனை பேர்களும், சேருப்பாலும் மண்ணாலும், கல்லாலும் அடித்தார்கள். பலர் 'சர். சி. பி. ஒழிந்தார்' என்றும் கூக்குரலிட்டனர். இது எதைக் காட்டுகிறது என்றால் திருவிதாங்கூர் திவானும் சர்க்காரும் கையாளும் அடக்குமுறையை ஜனங்கள் ஆதரிககவில்லை என்பதையே.

---

## சென்னை தெரு வியாபாரிகள் சங்கப் பொதுக் கூட்டம்.

24-7-38 மாலை 6-30 மணிக்கு சங்கத்தின் பொதுக் கூட்டம், தோழர் எ. எஸ். கே. அய்யங்கார் தலைமையில் நடைபெற்றது. அது சமயம் தோழர்கள், கே. முருகேசன், வி. எஸ். சோமசுந்தரம், கே. வரதராஜுலு' சி. பி. இளங்கோ, பி. ஸ்ரீனிவாசராவ் முதலியவர்கள் பரம ஏழைகளாகிய தெரு வியாபாரிகளை தெருக்களில் வியாபரம் செய்ய கார்ப்பொரேஷன் தடை விதித்திருப்பது நீதியல்ல வென்றும், போலீஸாராலும், கார்ப்பொரேஷன் சிப்பந்திகளாலும் இவர்களுக்கு ஏற்படும் துன்பங்கள் எல்லாம் தீர போராடுவதற்காகத்தான் சங்கம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதென்றும், ஆகவே தெரு வியாபாரிகள் அத்தனை பேரும் சங்கத்தில் சேர வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டனர். கூட்டத்திலேயே ஏராளமான வியாரிகள் சங்கத்தில் சேர்ந்தனர். இன்னும் சில வாரங்களுக்குள் அவர்கள் அத்தனைபேரும் சங்கத்தில் சேர்ந்து விடுவார்கள். என்று தெரிகிறது.

---

# செங்கொடியின் கீழ் சென்னைப் பிரதம மந்திரி



# சீன சோல்ஜர்களுக்கு விசேஷ சலுகை

ஜப்பானை எதிர்க்கும் யுத்தத்தில் பங்கெடுத்துக் கொள்ளும் ராணுவ உத்தியோகஸ்தர்கள், சிப்பாய்கள் முதலியவர்களுக்கும் அவர்களுடைய குடும்பங்களுக்கும் கீழ்கண்ட பிரகடனத்திற் கண்டபடி சலுகைகள் காட்டப்படும்.

1. ஜப்பானிய ஆக்கிரமிப்பை எதிர்க்கும் ராணுவ வீரர்களின் குடும்பங்களுடைய பொருளாதார நிலைமையை ஒவ்வொரு ஜில்லாக் கவர்ன்மெண்டும் அப்போதைக்கப்போது பரிசீலனை செய்து தாக்கல் செய்ய வேண்டும்.

2. ஜப்பானிய எதிர்ப்பு வீரர்களுக்கு அவர்கள் யுத்தத்திலீடுபட்டிருக்கும் வரையில் பின்கண்ட சௌகர்யங்கள் கிடைக்கும்.

(அ) ஒவ்வொரு போர் வீரனும் அவன் குடும்பமும் யாதொரு விதமான வரியும் விதிக்கப்படமாட்டார்கள்.

(ஆ) பொது ஸ்தலங்களில் குடியிருக்கும் அவர்களுடைய குடும்பங்களுக்கு வாடகை கிடையாது.

(இ) சர்க்கார் கடைகளில் ஸாமான்கள் வாங்கும்போது, இவர்களுக்கும் இவர்கள் குடும்பத்தாருக்கும் ஒரு சதவிகிதம் (1%) மலிவாகக் கொடுக்கப்படும். உணவுப் பொருள்களுக்கு அத்தியாவசியமான வஸ்துக்களுக்கு பஞ்சம் மேற்படும்போது, முதன் முதலில் இவர்களுக்கே சாமான்கள் விலைக்கு வழங்கப்படும்.

(ஈ) சிப்பாய்கள் ரயிலிலோ, கப்பலிலோ பிரயாணம் செய்யும்பொழுது, அவர்களுடைய செலவுகள் பொது கஜானாவிலிருந்து கொடுக்கப்படும்.

(உ) அவர்களுடைய குழந்தைகளுக்கு இலவசக் கல்வியளிக்கப்படும்.

(ஊ) ஒரு சிப்பாய், வியாதியினாலோ, அல்லது யுத்த காயங்களினாலோ ஓய்வு எடுத்துக்கொள்ள நேரும்போது, அவனுடைய செலவைச் சர்க்கார் பார்த்துக் கொள்ளும்.

3. ஐந்து வருஷ சேவை செய்து 45 வயது ஆன எல்லா சிப்பாய்களும் ஓய்வு எடுத்துக் கொள்ளலாம். அவர்களுடைய ஜீவிய காலம் பூராவுக்கும் பொது கஜானாவிலிருந்து பென்ஷன் கொடுக்கப்படும். அப்படி ஓய்வு எடுத்துக்கொள்ளாமல் சேவை செய்கிறவர்களுக்கு விசேஷ சலுகைகள் அளிக்கப்படும்.

4. ஷை சிப்பாயின் குடும்பத்தாருக்கு நிலங்களைப் பயிரிட ஆள் கிடைக்காவிட்டால் ஜில்லாவிலுள்ள ஜனங்கள் அவர்களுக்காகப் பயிரிட்டு அறுவடை செய்து கொடுக்கவேண்டும்.

5. யுத்தத்தில் வியாதியினாலோ, அல்லது சண்டையிலோ சிப்பாய்கள் இறந்துவிட்டால் அவர்களுடைய வீரச் செயல்கள், இறந்த தேதி, நேரம் ஆகிய இவைகளை சர்க்கார் பிரசுரிப்பார்கள்.

(அ) சாகுந்தருவாயில் அவர்கள் உபயோகித்துக் கொண்டிருந்த வஸ்துக்களை ஸர்க்கார் சேமித்து அவைகளைப் புரட்சி சரித்திரக் கண் காட்சி சாலையில் எல்லோரும் பார்வை யிடும்படி வைப்பார்கள்.

(ஆ) சர்க்கார் அவர்களுடைய ஈமக்கடன்களுக்கான செலவுகளை ஏற்றுக் கொள்ளுவது மன்றி ஒரு ஞாபகச் சின்னத்தையும் நிறுத்துவார்கள்.

6. இறந்துபோன அல்லது அங்கஹீன மடைந்த சிப்பாய்களின் குடும்பங்களுக்குக் கீழ்கண்ட சலுகைகள் காட்டப்படும்.

(அ) அவர்களின் குழந்தைகளும், இளைய சகோதர சகோதரிகளும் 18 வயதுவரும் வரையில் பிரத்தியேகமான பள்ளிக்கூடங்களில் இலவசப் படிப்பு அளிக்கப்பட்டு வேலைக்குக் கவர்ன்மெண்டால் சிபார்சு செய்யப்படுவார்கள்.

(ஆ) ஏற்கனவே சிப்பாய்களின் குடும்பத்தாருக்கு அளிக்கப்பட்டு வந்த சலுகைகளைப் பெறுவார்கள்.

7. யுத்தத்தில் அங்கஹீனர்களானவர்கள் சர்க்கார் செலவில் ஆரோக்ய வாசஸ்தலங்களுக்குப் போயிருக்கலாம். அங்கே இருக்க விருப்பமில்லாவிட்டால் அவர்களின் ஆயுட்காலம் பூராவும் வருஷாந்தரப் பென்ஷன்கள் கொடுக்கப்படுவார்கள். இதன் விவரங்கள் பிறகு அறிவிக்கப்படும்.

ஜன சக்தி

சென்னை, 30—7—'38.

# தொழிலாளர் பாதுகாப்புச் சட்டம் வேண்டும்

—(o)—

சென்னை இராஜதானித் தொழிலாளர்களிடத்தே சென்ற வருஷத்தில் காணப்பட்ட வேலை நிறுத்தங்களும், அவைகளினின்று ஏற்பட்டுவரும் ஒற்றுமையும் ஊக்கமும், வர்க்க உணர்ச்சியும் நம் நாட்டுத் தொழிலாளர் இயக்கம் அடைந்துவரும் அபிவிருத்திக்கு அத்தாக்ஷி. இவ்வுணர்ச்சி நமது மந்திரி சபைக்கு "கவலையளிப்பதாக" சென்ற வாரத்தில் விடுத்த அறிக்கையில் தெரிவித்திருக்கின்றனர். அவ்வறிக்கை பாக்டெரி இன்ஸ்பெக்டரின் வருஷாந்திர ரிபோர்ட்டின் மீது விடுக்கப்பட்டுள்ளது. காங்கிரஸ் மந்திரிசபை தொழிலாளர் இயக்கத்தினிடை எடுத்துக்கொள்ளும் நிலைக்கு அது ஒரு எடுத்துக்காட்டாகும்.

"முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் ஏற்படும் சண்டைகளுக்குக் காரணம், கூலியும், வேலை முறைகளுமே" என்று கூறுவது உண்மையே. ஆனல் இவ்விரு விஷயங்களிலும் முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் ஒற்றுமை ஏற்படுமென்று நினைப்பது, தற்காலத்திய முதலாளித்வ சமூக முரண்பாடுகளுக்கு விரோதமாகும். சம்பள வெட்டுகளும், வேலை நேர வேக மாறுபாடுகளும், எதிர்க்கப்படுவது, வயிற்றுப் பிழைப்பிற்கென இயல்பாகவே நடத்தப்படும் சண்டையே. ஆனல் இச்சண்டைகள் முடிவான போரல்லவென்று உணர்வதும், இச்சண்டைகளினின்றுதிக்கும் இராஜீய உணர்ச்சியும், சமூகப் புரட்சியின் அவசியமும் இந்தியத் தொழிலாளரியக்கத்தில் காணப்படும் விசேஷமாகும்.

"தொழிலாளி முதலாளி சண்டையை அவர்கட்குள்ளேயே தீர்த்துக் கொள்வது நலம்; வெளியினின்று மத்யஸ்தமோ, சமரசமோ செய்வதற்குத் தக்க காரணங்கள் வேண்டும்" என்ற கோரிக்கையைப் பாட்டாளிகள் ஆதரவும், ஏழை மக்கள் நலத்தையே தங்கள் லட்சியமாகக் கொண்டிருக்கும் காங்கிரஸ் வாதிகளனைவரும் மாற்ற வேண்டியது அவசியம். பொருளாதார பலத்திலும், இராஜீயக் கட்டுப்பாடுகளிலும், முதலாளிகளுக்கே எல்லாவித சௌகர்யங்களுமிருக்கின்றன. இங்கிலாந்தில் வேலை நேரக் குறைவு, சட்டத்தின் மூலமே கொண்டுவரப்பட்டிருக்கிறது. ஆகலால் தொழிலாளர்கள் இன்று சில்லரைச் சௌகரியங்களைப் பெறவும் கூட, கிளர்ச்சி செய்து, சர்க்காரை நிர்ப்பந்தப்படுத்தி தொழிலாளர் பாதுகாப்பிற்கான சட்டங்களை இயற்றும்படி செய்ய வேண்டியிருக்கிறது. இதிலிருந்தே தொழிலாளர்கள் இராஜீயப் போராட்டத்தில் ஈடுபட வேண்டியதின் அவசியத்தை நன்கு உணர்வார்கள்.

காங்கிரஸ் மந்திரி சபை பதவி ஏற்றபின்பு சென்ற வருஷத்தில் நான்கு வேலை நிறுத்தங்களில் விசாரணைக் கோர்ட்டுகள் நியமிக்கப்பட்டன. இரண்டுவேலை நிறுத்தங்களில் "ஆர்பிட்ரேஷன்" போர்ட் நியமிக்கப்பட்டன. விசாரணைக் கோர்ட் முடிவுகளை முதலாளிகள் ஓரிடத்திலும் ஒப்புக்கொள்ள முன்வரவில்லை. கோயமுத்தூரில் அதற்கு மாறாக எதிர்த்து நிற்கின்றனர். "ஆர்பிட்ரேஷனிலோ" அவ்வாறு பின்வாங்கி மோசடி செய்ய முடியவில்லை. இதுவே முதலாளிகளின் இயல்பை நன்கு விளக்கும். நமது காங்கிரஸ் மந்திரி சபை தொழிலாளர்களுக்குத் தம் பதவியினின்று உதவி புரிவதற்கு முதலாளிகளைக் கட்டாய மத்யஸ்துக்குட்படுத்துவதற்கு வேண்டிய சட்டத்தை உடனே கொண்டுவர வேண்டியது அவசியம்.

காங்கிரஸ் பதவி ஏற்றபிறகே பாக்டெரிகள் இன்ஸ்பெக்ஷன் கொஞ்சம் ஊக்கமாக நடத்தப்படுகிறது. கவர்ன்மெண்டார் உத்திரவால் 786 பாக்டெரிகள், பாக்டெரி ஆக்டின் விதிகளை யனுசரிக்கக் கட்டாயப்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆனல் இதற்குத் தக்க உத்தியோகஸ்தர்கள் போதாமலிருக்கும் குறையை காங்கிரஸ் மந்திரி சபையார் சீக்கிரத்தில் கவனித்துத் தீர்ப்பார்களென்று நம்புகின்றோம்.

நம் மாகாணத்திற் பல தொழிற்சாலைகளில் விடுமுறைகளே கிடையாது. தொழிற்சாலையிலுள்ள வசதிகளும் குறைவு. சம்பளங்கள் கொடுக்கும் முறைகளும் சரிவர இல்லை. வேலை நேரக் குறைவு அவசியமாய் விட்டது. சிறுவர்களும் பெண் பிள்ளைகளும் வேலை செய்யும் முறைகளிற் பல சீர்திருத்தங்கள் அவசியம்.

சில நாட்களுக்கு முன்னர் தொழிலாளிகளையும் முதலாளிகளையும் அழைத்து, நமது தொழில் மந்திரி பல விஷயங்களைப்பற்றி அவர்களது அபிப்ராயங்களைத் தெரிந்து கொண்டார். தொழிலாளர் நிலையை உயர்த்தி, அவர்களது இயக்கத்துக்குத் தக்க ஆதரவளிக்கும் சட்டமொன்று சீக்கிரத்தில் கொண்டுவரப்படுமென்று யாவரும் ஆவலுடன் எதிர் பார்க்கின்றனர். இச்சட்டத்தைப் பற்றி ஒன்றும் கவர்ன்மெண்டார் அறிக்கையில் காணப்படவில்லை. வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு உதவி புரிய ஏதோ செய்யப் போவதாக மட்டும் கூறப்பட்டுள்ளது. காங்கிரஸ் மந்திரி சபை தொழிலாளர் சட்டங்களைக் கொண்டுவரும் ஊக்கமே அவர்களது செல்வாக்கை வளர்த்து, தொழிலாளர் இயக்கத்தையும் விருத்தி செய்யும்.

தொழிலாளர்களது விடா முயற்சியே அச்சட்டங்களைக் கொண்டுவருவதற்கு அவசியமானதாகும். அம்முயற்சியை முதலாளிக்கும் தொழிலாளிக்கும் ஏற்படும் ஒரு வீட்டுச் சண்டையென நோக்காது நமது மந்திரி சபை வரவேற்று முதலாளித்வ மோசடியையும், செருக்கையும் அடக்க உதவி புரிவார்களாக.

—:0:—

# —: குறிப்புகள் :—

## வார்தா முடிவு

மத்ய மாகாண மந்திரிசபை விஷயத்தால் தான், சமீபத்தில் கூடிய காரியக் கமிட்டிக் கூட்டம் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. ஹிந்து-முஸ்லீம் பிரச்னை சம்பந்தமாகவும், ஆந்திரா மாகாண பிரச்னை சம்பந்தமாகவும் காரியக் கமிட்டி சரியான முடிவு செய்துள்ளது. இந்தியாவிலுள்ள முஸ்லீம்களின் அபிப்பிராயங்களை தெரிவிக்கும் ஸ்தாபனம் முஸ்லீம் லீக் ஒன்றுதான் என்று ஜின்னா கோருவதை, பொதுமக்கள் ஸ்தாபனமாய் விளங்கும் காங்கிரஸ் அங்கீகரிக்க இடமே இல்லை. முஸ்லிம் லீகில் சேராமல், வகுப்பு வாதத்தை குழிதோண்டிப் புதைத்துவிட்டு, பெருவாரியான முஸ்லீம் மக்கள் ஏகாதிபத்ய எதிரிகளாகி, பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தினிடமிருந்து பரிபூர்ண விடுதலையடைய காங்கிரஸ் கொடியின் கீழ் இருந்து சுதந்திரத்திற்காக போராடி வருகின்றனர். ஆனபடியால், முஸ்லீம் மக்களின் முழுப் பிரதிநிதித்வம் வாய்ந்ததே முஸ்லீம் லீக் என்ற ஜின்னா கோரிக்கையை காரியக் கமிட்டி ஒத்துக் கொள்ளாதது சரியான முடிவேயாகும். முக்கியமில்லாத விஷயங்களில் சண்டையிடுவதை விட்டுவிட்டு, சுதந்திரம் பெற பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தை எதிர்த்துப் போராட முஸ்லீம் லீக் தயாராயிருக்கிறதா அல்லது காங்கிரஸை எதிர்த்து அதன் மூலம், சுதந்திரத்திற்கு போராடும் இயக்கத்திற்கு முட்டுக்கட்டைகள் போடப் போகிறதா? இதை முஸ்லீம் லீக் இப்பொழுது தீர்மானிக்கட்டும்.

ஆந்திர மாகாணப் பிரச்னை சம்பந்தமாகக் காரியக் கமிட்டி சாத்தியமான முடிவை கூறியிருக்கிறது. இந்தப் பிரச்னை சம்பந்தமாக சட்டசபையும் ஆந்திர மாகாணப் பிரிவினையை அங்கீகரித்துள்ளது. காங்கிரசும் பாஷாவாரியாக மாகாணப் பிரிவினைக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருக்கும்போது, வீணான ஆர்ப்பாட்டங்களாலும் பிடிவாதத்தாலும் நாட்டிற்கு எந்த நன்மையும் விளையப்போவதில்லை என்ற வார்தா முடிவு மிகவும் சரியானதே.

மூன்றாவது முக்கிய முடிவு மத்திய மாகாண சங்கடத்தைப்பற்றியே. ஸ்ரீ. கரே, காரியக் கமிட்டி அனுமதி யில்லாமல் ராஜினாமாச் செய்ததும், அதோடு அவசரப்பட்டு மீண்டும் ஓர் மந்திரி சபையை அமைத்ததும் மன்னிக்க முடியாத தவறுகளாகும். கரே ராஜினாமாச் செய்தவுடன் மூன்று மந்திரிகளும் ராஜினாமாச் செய்திருக்கவேண்டுவதே ஒழுங்கு. அவர்கள் செய்ததை காரியக் கமிட்டி தனது தீர்மானத்தில் போற்றியிருப்பது ஒத்துக்கொள்ள முடியாது. மந்திரிப் பதவிகளில் இருந்த திறமையற்ற பழைய ஆசாமிகள் சகலரையும் விலக்கிவிட்டு, புதிய ஆசாமிகளை மந்திரி சபைக்கு தேர்ந்தெடுத்திருக்கவேண்டியதே சரியான போக்கென்று நாம் கருதுகிறோம்.

சமஷ்டி சம்பந்தமாக ஸ்ரீ சத்தியமூர்த்தியால் வெளியிடப்பட்ட காங்கிரஸ் தீர்மானத்திற்குத் துரோகமான அறிக்கை சம்பந்தமாக, நாட்டில் ஏற்பட்டிருக்கும் கொந்தளிப்பைப்பற்றி காரியக் கமிட்டி கவனம் செலுத்தாது போனது வருந்தத் தக்கதே. சமஷ்டி சம்பந்தமாக எந்தவித பேரமும் காங்கிரஸ் செய்யப் போவதில்லை என்பதையும், பொறுப்பற்றத்தனமாக நடக்கும் அதன் அங்கத்தினர்கள் மீது தக்க நடவடிக்கை எடுக்கப்படும் என்பதையும் காரியக்கமிட்டி வெளிப்படுத்தியிருக்க வேண்டும்.

## கிரிமினல் லா திருத்தச் சட்டம் ஒழியவேண்டும்.

சட்ட புஸ்தகத்திற்கே அவமானமாக இருந்துவரும் சட்டங்களில் ஒன்றான கிரிமினல் லா திருத்தச் சட்டத்தை சட்ட புஸ்தகத்திலிருந்து எடுத்துவிட வேண்டுமென்று ஸ்ரீ. கிருஷ்ணமாச்சாரி, வருகிற சென்னை அசெம்ளி கூட்டத்தில் ஓர் மசோதா கொண்டுவர உத்தேசித்திருப்பதை நாம் பாராட்டுகிறோம். தேச மக்களின், சட்டசபை அங்கத்தினர்களின் எதிர்ப்புகளையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு, வைசிராய் சென்ற சட்டமறுப்பு போராட்ட காலத்தில், சட்டமறுப்பு இயக்கத்தை ஒடுக்க தனது விசேஷ அதிகாரத்தால் இந்த கிரிமினல் லா திருத்த சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தார். சென்ற காலத்தில் வன்மையாக இந்த சட்டத்தை கண்டித்த அதேகாங்கிரஸ், இன்று எவ்வளவுதான் கோபத்தை பிறர் கிளப்பிவிட்டாலும், அதற்காளாகி இந்த சட்டத்தை பிரயோகிக்க முற்படுவது சரியல்ல. சட்டம் இருக்கும்போது, அதை பிரயோகித்துத்தான் பார்ப்போமே என்று பொது மக்கள் மந்திரி சபையான காங்கிரஸ் மந்திரி சபைகூட முடிவிற்கு வருகிறது. எனவே இந்த சட்டத்தை சட்ட புஸ்தகத்திலிருந்தே எடுத்து விட்டால், சட்டத்தை பிரயோகித்துத்தான் பார்ப்போமே என்ற எண்ணம் தோன்றுவதற்கே இடமில்லாமற் போய்விடும்.

## அமிர்தசரசில் தடியடிப் பிரயோகம்

மிக அமைதியோடு சென்ற விவசாயிகள் ஊர்வலங்களை சிக்கந்தர் ஹையத்கான் மந்திரி சபை, தடியடிப் பிரயோகத்தால் கலைத்ததை நாம் வன்மையாக கண்டிக்கின்றோம். இன்று பஞ்சாபிலுள்ள இந்த பிற்போக்கான மந்திரி சபை, சென்ற கால சர்க்கார்கள் கையாண்ட அடக்கு முறைகளையே தான் கையாண்டு வருகிறது. இந்த காட்டுமிராண்டித்தனமான தடியடிப் பிரயோகத்திற்கிடையேகூட, மிக அமைதியாகவும் சாத்மீகமாகவும் இருந்த விவசாயகள் நடத்தை அளவு கடந்து பாராட்டத்தக்க விஷயமாகும். எவ்வளவுதான் தடியடிப் பிரயோகம் தாண்டவமாடினாலும், விடுதலைக்காக போராடும் விவசாயிகள் இயக்கத்தை அடக்கவும் முடியாது ஒடுக்கவும் முடியாது என்பதை சிக்கந்தர் ஹையத்கான் தெரிந்து கொள்ளட்டும். மக்கள் மென்மேலும் உறுதியாகவும் கட்டுப்பாடாகவும் இருந்து, புதிய வழிகளை ஏற்படுத்திக்கொண்டு, தீவிரமாகப் போராட முனைந்து முன்னுக்கு வருவார்கள் என்பதை மட்டும் ஹையத்கான் மந்திரி சபை கண்டு கொள்ளட்டும்.

## சைனாவிற்கு சோவியத் உதவி

உலகத்தில் ஒரு நாடுமட்டுமே, தான் தெரிவிப்பதுபடி நடந்துவர முயற்சித்து வருகிறது. சொல்வது ஒன்று நடப்பது வேறொன்று என்பதை காணவே முடியாது. இந்த நாடுதான் சோவியத் ரஷ்யாவாகும். ஸ்பெயின் ஜனநாயகத்துவத்திற்கு சோவியத் யூனியன் உதவி அளிக்க முன்வராது போயிருக்குமேயாயின், ஹிட்லர் முசோலினி இருவரின் காலனியாக ஸ்பெயின் நீண்ட நாட்களுக்கு முன்பே ஏற்பட்டிருக்கும். அதுபோலவே இன்று, ஜப்பானிய ஏகாதிபத்யத்திற்கு எதிராகப் போராடி வரும் சீன மக்களைக் காப்பாற்ற சோவியத் யூனியன் முன்வந்துள்ளது. ஹிட்லரும் முசோலினியும் அவர்கள் விமான நிபுணர்களை அழைத்துக்கொண்டபோது, சைனா படையை பாஸிஸ்டு ஜப்பானியர் நசுக்கி நாசமாக்கி சீனாவை கைப்பற்றி விடுவார்கள் என்று நினைத்தார்கள். ஆனால் சோவியத் யூனியன் சீன மக்களைக் காப்பாற்ற முன் வந்துள்ளது சீனாவை விழுங்க முற்பட்ட ஜப்பான், இன்று சீனாவை விழுங்கவே முடியாதென்பதை கண்டு கொண்டது.

## ஸ்பெயின் போராட்டம்

ஸ்பெயினில் நடந்துவரும் வீரப்போராட்டம், உலக சரித்திரச் சிறப்பு வாய்ந்துவிட்டது. ஸ்பெயினில் நடந்து வரும் இந்தப் போராட்டம் எந்த விஷயத்தோடும் ஒப்பிட்டுக்கூறவே முடியாத அளவிற்கு பெருமை வாய்ந்ததாகும். ஸ்பெயின் தேசத்து மக்கள், ஜன நாயகத்திற்காகவும், விடுதலைக்காகவும், உணவிற்காகவும் போராடி வருகிறார்கள். 2 வருஷ காலம் கழிந்து, மூன்றாவது வருஷமும் ஆரம்பமாய் விட்டது. கலகக்காரர்களான பாஸிஸ்டு வெறியர்களை எதிர்த்து, சளைக்காமல் போராடி வருகிறார்கள் ஸ்பெயின் தேசத்து மக்கள். பெர்லினிலிருந்தும், ரோமிலிருந்தும் பாஸிஸ்டு கொலைகாரர்கள் கலகக்காரர்களுக்கு இடைவிடாது உதவி அளித்துக்கொண்டே வருகிறார்கள். ஜனநாயகத்திற்கு இருப்பிடமென்று பறைசாற்றும் பிரிட்டனே, சேம்பர்லின் கீழ், ஸ்பெயின் தேசத்து மக்கள் போராட்டம் முழுத்தோல்வியை அடையும் நாளை எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறது. இந்த அநியாய அக்கிரமங்களுக்கிடையே போராடிவரும் ஸ்பெயின் மக்கள் போராட்டத்தை உலகமக்கள் கண்டுதிகைப்படைகிறார்கள்! யார் ஜெயம் பெறுவார்கள் என்று எவரும் இப்பொழுது ஜோசியம் சொல்ல முடியாது. மற்ற நாடுகள் ஸ்பெயினில் நடைபெற்றுவரும் கொலைகளைக்கண்டு கவலைப்படாமல் சும்மா இருக்குமேயானல், ஜனநாயகத்திற்கும், சமாதானத்திற்கும் சவக்குழியை தோண்டிய கைங்கரியத்தை செய்தவைகளாகின்றன.

---

# திருவிதாங்கூர் 'வெல்லிங்டன்'

●

**கொடுமுடி - ராஜகோபால்**

லார்டு வெல்லிங்டன் என்ற ஆங்கிலப் பிரபுவைப் பற்றி இந்திய மக்கள் நன்கு அறிவார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின் 'ஏஜெண்டாக' இந்தியாவில் பல வருஷங்கள் அவர் இருந்திருக்கிறார். சென்னை கவர்னராகவும், ராஜப் பிரதிநிதியாகவும், அவர் அரசு புரிந்த காலம் மிகவும் முக்கியமான காலமாகும். 'ஆளும்' வர்க்கத்தைச் சேர்ந்த அவர், மிகவும் கர்வம் படைத்தவர். இந்திய மக்கள் என்றென்றும் வெள்ளை வர்க்கத்தினருக்கு அடிமைகளாக வாழ்ந்திருக்க வேண்டுமென்ற ஆசை அவருக் கதிகமுண்டு. 'சுதந்திரம் எங்கள் பிறப்புரிமை' என்று இந்திய மக்கள் கோஷமிடுவதுகூட அவருக்குப் பிடிக்காது. "காங்கிரஸை நசுக்கி விடுகிறேன்" என்று கர்ஜனை செய்து கொண்டு தான் அவர் இந்தியாவின் ராஜப்பிரதிநிதிப் பதவி யேற்றார்.

அவர் பதவியேற்ற சமயத்தில் இந்திய மக்களின் சுதந்திர உணர்ச்சி உச்ச ஸ்தாயியிலிருந்தது. மக்களிடை கொழுந்து விட்டெரிந்த விடுதலை உணர்ச்சியைத் தடுக்க, லார்டு வெல்லிங்டன் கடுமையான அடக்கு முறைகளைக் கையாண்டார். நாட்டினரின் நன்மதிப்பைப் பெற்ற பல தலைவர்கள் சிறைக்குள் தள்ளப்பட்டனர். ஜனங்களின் எண்ணங்களையும், உணர்ச்சியையும் வெளியிட்ட பத்திரிகைகள் தடுக்கப்பட்டன. இரக்கமற்ற சித்திரவதையும், தடியடி தர்பாரும் பிரிட்டிஷ் சர்க்காருக்கு அச்சமயம் தண்ணீர்பட்ட பாடாயிருந்தது. ஆயிரக்கணக்கான இந்திய ஸ்திரீகள் மானபங்கப்படுத்தப்பட்டனர். பல 'குமாரசாமிகளின்' மண்டைகள் பிளக்கப்பட்டு இரத்த வெள்ளத்தில் மிதந்ததை நம்மில் பலர் கண்கூடாகக் கண்டோம். இவை யாவும், பிரிட்டிஷ் ஆட்சியை நாம் கட்டுப் பாடாக எதிர்த்ததால் தான், நடைபெற்றன என்பதை யாவரும் உணர்ந்தே யிருக்கிறார்கள்.

வீர சுதந்திரம் வேண்டி நிற்கும், நம்மை எவ்விதக் கடுமையான அடக்கு முறைகளாலும் ஒடுக்கிவிட முடியாது என்பதை பிரிட்டிஷ் சர்க்காரே உணர்ந்துவிடவில்லையா? சுதந்திரம் கோரி இடைவிடாது போராடும் இந்திய மக்களை 'அரசியல் சீர்திருத்தம்' கொடுத்தாவது ஏமாற்றி விடலாம் என்ற எண்ணமாவது பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின் மனதில் உதிக்கவில்லையா?

கொடிய அடக்கு முறையால், ஜனங்களிடை வளர்ந்து வரும் ராஜீய உணர்ச்சியை எவராலும் தடுக்க முடியாது. அடக்கு முறை வலுக்க வலுக்க, ஜனங்களிடை தோன்றும் சுதந்தர உணர்ச்சியும் வலுக்கும். ஜனங்களின் உணர்ச்சி வலுக்க வலுக்க அவர்களிடை புரட்சிகரமான கிளர்ச்சியும் தோன்றும். அக்கட்டுப்பாடான கிளர்ச்சியே, ஜனங்களின் சுதந்திர உணர்ச்சியை ஒடுக்கிவந்த யதேச்சாதிகாரத்தின் வீழ்ச்சிக்கு மூலகாரணம்.

லார்டு வெல்லிங்டனின் கோரமான அடக்கு முறைகளுக்கிடையே, இந்திய தேசிய காங்கிரஸ் வலுப் பெற்றதையும், இன்று இந்திய மக்கள் ஓரே அடியாகப் பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தையே ஒழிப்பதற்குக் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பதையும் உலகத்தினரும் அறிவர். நம்முடைய விடுதலைப் போராட்டம், நம்மாலேயே நடத்தப்பட வேண்டும்; நம்முடைய கட்டுப்பாடான கிளர்ச்சி மூலம் நாம் நிச்சயமாக வெற்றி பெறலாம், என்ற உண்மையை, லார்டு வெல்லிங்கடன் போன்றவர்களின் அடக்குமுறைகளாலும், அதை எதிர்த்து நாம் செய்த தியாகத்தாலும், நாம் அறிந்து கொண்டிருக்கிறோம்.

இந்தியரிடை காட்டுத் தீ போல் பரவிவரும் இந்த ஏகாதிபத்ய எதிர்ப்பு உணர்ச்சியை இனி ஒடுக்கிவிட எண்ணுவது அவ்வளவு சுலபமான காரியமில்லை என்று லண்டனிலுள்ள பிரிட்டிஷ் சர்க்காரின் பிரதிநிதிகள் உணர்ந்துவிட்டனர். பூரண சுதந்திரத்தை நாம் அடையும் நாள் வெகு தூரத்தில் இல்லை. தளராத உற்சாகமும், குன்றாத ஆர்வமும், ஒற்றுமையும், கட்டுப்பாடும் நமக்கு இருந்தால், இந்த 'கொள்ளைக்கார' பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தை நிச்சயமாக நாம் அகற்றி விடுவோம்.

இந்திய மக்களின் சுதந்திரப் போராட்டத்தின் ஒரு பகுதிதான் இன்று சமஸ்தானங்களில் நடக்கும் பொறுப்பாட்சி கிளர்ச்சி. வேறு ஜாதி, சமயம், கலை ஞானம், நாகரீகம் இவை பெற்ற பிரிட்டிஷார், நம்மை அடிமைப்படுத்தி ஆள உதவியாயிருப்பது இந்த சமஸ் தானாதிபதிகள் என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

சமஸ்தானங்களில், பிரஜைகளால் நடத்தப்படும் 'பொறுப்பாட்சி'க் கிளர்ச்சிக்கு பிரிட்டிஷ் இந்திய மக்கள் இந்திய தேசிய காங்கிரஸ் இவைகளின் பூரண அனுதாபம் இருக்கிறது. "சமஸ்தானங்களில் பொறுப்பாட்சி'க் கிளர்ச்சியை இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபை ஏன் நடத்தக் கூடாது? சுயராஜ்யம் என்றால் சமஸ்தான பிரஜைகளுக்கும் சேர்த்துத் தானே!" என்று அநேக காங்கிரஸ் வாதிகள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

"இன்றுள்ள நிலையில் காங்கிரஸ் சமஸ்தான விஷயங்களில் நேரடியாக தலையிட முடியாது. சமஸ்தானங்களில் நடக்கும் போராட்டங்கள் சமஸ்தான பிரஜைகளாலேயே நடத்தப்பட வேண்டும்" என்று காங்கிரஸ் ஹரிபுராவில் தீர்மானித்துவிட்டது. ஆயின், சமஸ்தானங்களில் இன்று நடைபெற்றுவரும் 'இராக்ஷஸ' அடக்குமுறை தர்பாரைக் கண்டாவது, காங்கிரஸ், தனது பழைய தீர்மானத்தை மாற்றிக்கொண்டு, யதேச்சாதிகார மன்னர்களால் நசுக்கப்பட்டுவரும் பிரஜைகளின் உதவிக்கு முன்வர வேண்டிய காலமும் நெருங்கிவிட்டது.

'ராமராஜ்யம்' என்று காந்திஜியால் அழைக்கப்பட்ட மைசூர் சமஸ்தானத்தில் சமீபத்தில் நடந்து, தற்காலீகமாக முடிந்துபோன 'பொறுப்பாட்சி'க் கிளர்ச்சியின் விவரத்தை நாம் அறிவோம். மைசூர் சர்க்காரின் அடக்குமுறை, 'விதுராஸ்வதப்' படுகொலை வரை, தாண்டவமாடவில்லையா? முடிவில், அங்கு ஜனங்களின் இயக்கம் வெற்றி பெற்றதையும், மைசூர் சர்க்காரும் ஜனங்களின் 'பொறுப்பாட்சி' ஆர்வத்தை உணர்ந்து அவர்களுக்காக ஒரு அரசியல் சீர்திருத்தம் வழங்குவதற்காக முன்னேற்பாடுகள் இன்று செய்து வருவதையும் நாம் நன்றாக தெரிந்திருக்கிறோம்.

திருவாங்கூர் சமஸ்தானத்திலும் பல மாதங்களாக 'பொறுப்பாட்சி' வேண்டுமென்ற கிளர்ச்சி வெகு மும்முரமாக நடந்து வருகிறது. திருவாங்கூரில் இந்த இயக்கம் 'திருவாங்கூர் சமஸ்தான காங்கிரஸ்' என்ற அரசியல் ஸ்தாபனத்தின் பேரால் நடைபெற்று வருகிறது.

இந்த நியாயமான இயக்கத்திற்கு கடுமையான வைரிதான், திவான் ஸர். ஸி. பி. ராமசாமி அய்யர். இவர், இந்த இயக்கத்தை ஒடுக்குவதற்கு அனுஷ்டித்து வரும் முறைகள், முன்னர் காங்கிரஸ் இயக்கத்தை நசுக்குவதற்கு லார்டு வெல்லிங்டனால் கையாண்ட முறைகளையே ஒத்திருக்கிறது. திருவாங்கூர் 'வெலிங்டனாகிய' ஸர். ஸி. பி. ஜனநாயகத்துவத்தின் விரோதி என்று சொன்னாலும் பொருந்தும். 'ஏகாதிபத்ய மனப்பான்மை', 'சர்வாதிகாரியின் முறை' முதலிய பாடங்களை, லார்டு வெல்லிங்டனிடம் 'நல்ல பிள்ளையாக' இருந்து நன்றாகக் கற்றுக் கொண்டவர்களுள் சிறப்பானவர் ஸர் ஸி. பி.

திருவாங்கூர் சமஸ்தான காங்கிரஸையும், ஜனங்களால் அங்கு

(15-ம் பக்கம் பார்க்க)

# சோவியத் யூனியனில் தொழிற்சங்க நடவடிக்கை

சோவியத் யூனியனில் 2 கோடியே 20 லக்ஷம் தொழிலாளர்களுக்குமேல் 162 வெவ்வேறு தொழிற் சங்கங்களை அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். தொழிற் சங்கத்தில் அங்கத்தினராக வேண்டுமென்று சோவியத் யூனியனில் எவரும் நிர்ப்பந்தப்படுத்தப் படுவதில்லை. அப்படியிருந்துங்கூட தொழிற்சாலைகளிலும், வியாபாரத்திலும், பொருளாதார பல கிளை ஸ்தாபனங்களிலும் வேலை செய்யும் பக்களில் கிட்டத்தட்ட 100-க்கு 82 மக்கள் அவரவர்களுக்குரிய தொழிலாளர் சங்கத்தில் அங்கத்தினர்களாய் இருக்கிறார்கள்.

* * *

சோவியத் யூனியனிலுள்ள தொழிற் சங்கங்கள், உழைப்பாள மக்களின் பொருளாதார வளர்ச்சிக்கும், கலை வளர்ச்சிக்கும் பாடுபட்டு வருகிறது. முதலாளித்வத்தால் கொள்ளை அடிக்கப்பட்டுவரும் பிற நாடுகளிலுள்ள உழைப்பாளர் வர்க்க பாத்யதைகளிலிருந்து, முதலாளித்வத்தை அடியோடு ஒழித்து சகல உற்பத்தி சாதனங்களையும் தாங்களே வைத்திருக்கும் சோவியத் ரஷ்ய உழைப்பாளர் வர்க்கத்தின் பாத்யதைகள் வேறுபட்டிருக்கின்றன. சோவியத் ரஷ்யாவில் தொழிலாளர்-விவசாயிகள் சர்க்கார் மக்களை சுரண்டும் சர்க்காரல்ல—ஆனால் ஓர் சோஷியலிஸ்டு சர்க்காராகும். எந்தக் காரியமோ, எந்த ஸ்தாபனமான எல்லாவற்றிற்கும் சோவியத் உழைப்பாளிகளே எஜமானர்கள்.

* * *

பொருளாதார ஸ்தாபனங்களுக்கும், உற்பத்தி ஸ்தாபனங்களின் சிறந்த நிர்வாக சபைகளுக்கும் உள்ள நிர்ணயமான வேலைகளைப் போல, சோஷியலிஸ்டு சர்க்கார் கட்டுத் திட்டத்திற்குட்பட்ட நிர்ணயமான வேலைகளை உழைப்பாளர்களுக்கு ஒதுக்கிக் கொடுக்கிறார்கள். இப்படி இருந்தபோதிலும், இது, தொழிற் சங்க ஸ்தாபனம் அவசியமில்லை என்பதைக் காட்டவில்லை. உழைப்பாள மக்கள் அனைவரின் சமூக உரிமைகளோடு, இந்த ஸ்தாபனங்களின் அங்கத்தினர்களின் சமூக, கலை வளர்ச்சி விஷயங்களும் ஒன்று சேர்க்கப்பட்டிருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்க முக்கிய விஷயமாகும்.

* * *

சோவியத் யூனியனில், சம்பள சம்பந்தமாகத் தொழிற் சங்கம் (டிரேட் யூனியன்) எப்படி நடந்து கொள்கிறது? சோவியத் யூனியன் உழைப்பாளர்களின் சம்பளம், கூட்டுறவு ஒப்பந்தங்களால் திட்டம் செய்யப்படுகின்றன. தொழிற் சங்க மத்ய கமிட்டியாரும், உர்பத்திகளை பரிபாலிக்கும் முக்கிய நிர்வாக சபையாரும் கூடி, வருடா வருடம் இந்தக்கூட்டுறவு ஒப்பந்தங்களை புதுப்பிக்கிறார்கள். சர்க்கார், பொருளாதார ஸ்தாபனங்களிடம் சம்பளத் தொகையை கொடுத்து விடுகிறார்கள். தொழிற் சங்க மத்திய கமிட்டி, தொழிற்சாலை சம்பந்தப்பட்ட மட்டும், அதனை பரிபாலிக்கும் முக்கிய நிர்வாக சபையைக் கலந்தபின், தொழிற்சாலைகள், தனிப்பட்ட வேலைகளுக்கு சம்பளப் பண்டு தொகை நிர்ணயிக்கப்படுகிறது. ஒவ்வொரு தடவையும் கூட்டுறவு ஒப்பந்தத்தை ஏற்று நடத்தும்போது, இந்த சப்பளப் பண்டை அடிப்படையாக வைத்தே, தொழிற் சங்கங்கள் மேலே குறித்த கூட்டுறவு ஒப்பந்தத் திட்டத்தை நிறைவேற்றுகின்றனர். தொழிற் சங்க அஙகத்தினர்களின் கூட்டங்களில், இந்தத் திட்டம் பிறகு சமர்ப்பிக்பிக்கப்படுகிறது. இந்த திட்டத்தைக் குறித்து மிக விரிவாக கலந்தாலோசிக்கிறார்கள். ஒவ்வொரு தொழிலாளிக்கும் இந்த திட்டத்திற்கு திருத்தம் கூற முழு உரிமை உண்டு. பல கிரேடுகள், பீஸ் ஓர்க் ரேட்டுகள், அதிக அலவென்சுகள் முதலியவைகளுக்காக, கூட்டுறவு ஒப்பந்தம் அடிப்படையான சப்பளத்தை நிர்ணயிப்பதோடு நின்று விடாமல், உழைப்பாளர்களின் சமூக, கலை வளர்ச்சிகள் பெருகிக் கொண்டு போவதற்கும், அதிகப்படியாக உற்பத்தி செய்வோருக்கு அதிகப்படியான சம்பளமும், பாதுகாப்பிற்கு வேண்டிய சகல விஷயங்களையும் இது போன்றவைகளையும் கூட்டுறவு ஒப்பந்தம் கவனிக்கிறது.

* * * *

ஓர் கூட்டுறவு ஒப்பந்தம் ஏற்பட்டதென்றால், குறிப்பிட்ட தொழிலுக்காக மொத்த சம்பளத் தொகை தீர்மானிக்கப்பட்ட விஷயமாகப் போய் விடவில்லை. . இந்த ஒப்பந்தம் சகலரும் கலந்தாலோசித்து தீர்மானிக்கப்பட்ட பிறகே, வேலை தொடங்கி முடிக்கிறார்கள். இந்த பேச்சு வார்த்தைகள் பலவாரங்கள் நடக்கும். பல மாதங்கள் கூட நடக்கும். ஒவ்வொரு யோசனையும் கூர்ந்து கவனிக்கப்படும். ஒவ்வொரு பிரிவிலுள்ள தனிப்பட்ட தொழிலாளர்கள் உரிமைகளைப் பற்றியும் அல்லது தொழிற் சங்கத்தைப் பற்றியும், கூட்டுறவு உரிமைகளை எடுத்துக் கொண்டும் கவனிக்கப்படும். இறுதியாக சோஷியலிஸ்டு சர்க்கார் கீழுள்ள மக்களின் பொது உரிமைகளைப் பற்றியும் கமிட்டியார் கவனிப்பார்கள்.

இந்த மாதிரி கூட்டுறவு ஒப்பந்தங்களின்மேல், வேலையை ஒப்புக்கொண்டு நடத்தி வருவது சம்பந்தமாக, ஓர் மத்யஸ்த கமிஷன், நாளா வட்டத்தில் கிளம்பும் சகல கேள்விகளுக்கும் சரியான பதிலளித்து, கூட்டுறவு ஒப்பந்தத்தை முடித்துவைக்கும். இந்த மத்யஸ்த கமிஷன்கள், தொழிலாளர் சங்கங்கள், பொருளாதார ஸ்தாபனங்களின் சம பிரதிநிதித்வத்தைக் கொண்டதாகும். மத்யஸ்த கமிஷன் ஒரு தொழிலாளி கொண்டு வரும் பிராதை விஜாரித்து, மூன்று நாட்களுக்குள் தொழிலாளிக்கு முடிவை தெரிவித்துவிட வேண்டும். தொழிலாளர்கள் பிரதிநிதிகளும், ஓர்க்ஸ் மானேஜமெண்டு பிரதிநிதிகளும் ஓர் முடிவிற்கு வாத்தவறினால், உடனே ஜனங்கள் கோர்டின் (பீப்பிள்ஸ் கோர்டின்) முடிவிற்கு விடப்படும்.

குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட வேலைகளை செய்வதாக கூட்டுறவு ஒப்பந்த மூலமாக ஏற்பட்டதை ஏற்றுக் கொண்டு நடத்தி வரும்போது, அவ்வப்போது, ஒப்பந்தத்தை சரியாக நிறைவேற்றி வைக்க, தொழிலாளர்கள் வேலைகள் கவனிக்கப்படுகின்றன. குறிப்பிட்ட காலத்தில் ஒப்பந்தபபடி சரிவர வேலையை முடித்து விடுவது சம்பந்தமாக தொழிலாளர் சங்கத்திலேயே ரொம்பவும் உற்சாகமுள்ளவர்கள், இதையே தொழிலாளர்களிடை பிரச்சாரம் செய்து, சர்வசாதாரணமாக அனைவரையும், அந்த மாதிரியாக நடக்க முற்படும்படி செய்து விடுகிறார்கள். தவறுதல்கள், கணக்கு வழக்கில் பொய் பித்தலாட்டம், மோசம் ஏதாவது கண்டு பிடிக்கப்பட்டால், குற்றம் செய்தவர்கள் மக்களால் பொதுவாக நிந்திக்கப்படுவார்கள். அல்லது வேண்டுமென்றே குற்றத்தை செய்திருந்தால், ஜனங்கள் கோர்ட்டார் முன் கொண்டுவரப்பட்டு கண்டிக்கப்படுகிறார்கள். தண்டிக்கப் படுகிறார்கள்.

* * *

இது எந்த விதத்திலும் தொழிற்சாலைகளிலோ மற்ற வேலைகளிலோ ஈடுபட்டிருக்கும் தொழிற்சங்க நடவடிக்கையை குன்றச் செய்யாது. 1933ம் வருஷம் தொழில் சம்பந்தப்பட்ட ஜனங்களுடைய கமிட்டியைக் கலைத்துவிட்டதிலிருந்து, தொழிலாளர்கள் பாதுகாப்பு விஷயம் முழுவதும் சோவியத் தொழிலாளர் சங்கங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு தொழிற் சங்கத்திலும், ஸ்பெஷல் தொழிலாளர் இன்ஸ்பெக்டர்கள் இருக்கிறார்கள். இவர்கள், சட்டப்படி தொழிலாளர்களை காப்பதற்கும், வாலிபர்களை காப்பதற்கும், விபத்துகளை தடுக்க சட்டங்களும், தொழிலாளர் சம்பந்தமான தொழில் சட்டங்களும் நிறைவேற்றச் சொல்லமனுப் போடவேண்டும். இந்த இன்ஸ்பெக்டர்கள் தொழில் நடக்குமிடங்களிலும், தொழிற்சாலைகளிலும் விசாரிக்கவரும்போது, தொழிற்சங்க பிரதிநிதிகள் அந்தந்த வேலைகளைப்பற்றி அந்தந்த வேலைகளைத் தெரிந்தவர்கள் இவர்களுக்கு முழு விபரத்தைத்தெரிவிக்கிறார்கள். சுகாதாரம் சரிவர இருக்கவேண்டிய விஷயத்திலும், தொழிற் சட்டங்கள் சரிவர நடைபெற்று வரும் விஷயத்திலும் ஒவ்வொரு நாளும் கண்ணும் கருத்துமாய் இருக்கவேண்டும் இந்த இன்ஸ்பெக்டர்கள். தொழிலாளர் பாதுகாப்பிற்குள்ள சட்டங்களைமீறும் குற்றவாளிகளை இன்ஸ்பெக்டர்கள், கோர்டார் முன் கொண்டுவர உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. சோவியத் யூனியன் சட்டங்கள் சுருக்கமானவை. அதோடு மிகத் தெளிவானவை. இந்தத்தொழிலாளர்இன்ஸ்பெக்டர்களுக்கு எவ்வளவு தூரம் உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது என்பதை கீழே காணும் விஷயத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

அந்த இன்ஸ்பெக்டர்கள் புதிதாக கட்டப்படும் கட்டிடங்களை மேற் பார்வையிடலாம். தொழிலாளர் சட்டத்தின் 138வது பிரிவில் "எந்த ஒரு செடியையும் கூட தொழிலாளர் இன்ஸ்பெக்டர்கள் உத்தரவில்லாமல் தொழிற் சாலையில் நடவுங் கூடாது—வளர்க்கவும் கூடாது.

(18-ம் பக்கம் பார்க்க)

# பூர்ஷுவா ஜனநாயகமும் தொழிலாளர் சர்வாதிகாரமும்

*

(எஸ். சுந்தரேசன்)

சர்வ தேசங்களிலுமுள்ள, தொழிலாள வர்க்கத்தின் புரட்சி எண்ணத்தின் வளர்ச்சியால், பூர்ஷ்வாக்களாலும் தொழிலாள ஸ்தாபனத்தில் இருக்கும் அவர்களது ஏஜெண்ட்களாலும், சுரண்டும் வர்க்கத்திற்கு வக்காலத்துப் பேசப்பட்டது, பைத்தியக்காரத்தனமான வேலையாயிற்று. தங்களுக்கு அனுகூலமாக ஜனநாயகத்திற்கு விரோதம், சர்வாதிகாரம் எனக் கூறித், தொழிலாளரின் வர்க்க உணர்ச்சியையும் தொழிலாளர் சர்வாதிகாரத்தையும் எதிர்த்து வந்தார்கள்—எதிர்த்து வருகிறார்கள். இம்மாதிரியான வாதத்தின், ஏமாற்றுந் தன்மையும், வஞ்சனையும் பற்பல முறைகளில் வெளியாயின—வெளி வந்துகொண்டிருக்கின்றன.

இந்த தர்க்கமானது, பொதுப் படையாக ஜன நாயகத்தைப் பற்றியும், பொதுப் படையாகவே சர்வாதிசாரத்தை பற்றியும், வர்க்கத்தைப் பற்றிய சம்மந்த மில்லாமலே, நடத்தப் படுகிறது. இந்தவர்க்க சம்மந்த மில்லாத, பிரச்சினையின் மூலம், அடிப்படையான, சோஷியலிஸத்தின் தத்துவமாகிய வர்க்கப் போராட்டத்தை மறுப்பது சோஷியலிஸக் கொள்கையையே நேரடியாக எதிர்ப்பதற் கொப்பாகும். இன்றைய எந்த ஒரு முதலாளித்துவ நாட்டிலும் உண்மையான ஜனநாயகம் இல்லை. ஆனால் பூர்ஷுவா ஜனநாயகந்தான் தாண்டவமாடுகிறது. அம்மாதிரி சர்வாதிகாரம் என்பதில்லை. 'சுரண்டப்பட்ட மக்களின் சர்வாதிகாரந்தான், அது சுரண்டுபவர்களின், எதிர்ப்பு, தன் ஆட்சிக்கு ஊறு செய்யாதிருக்கவும், தன் ஆட்சியைக் காப்பாற்றவுமே அந்ததொழிலாளசர்வாதிகாரம் என அறிக.

ஒடுக்கப்பட்ட - நசுக்கப்பட்ட தொழிலாள வர்க்கம் இதுவரை அதிகாரத்திற்கு வந்ததில்லை. (ரஷ்யாவைத் தவிர) ஆகவே, அரசியலைக் கைப்பற்றவும், மிகக் கொடூரமான சுரண்டு வர்க்கத்தின் (முதலாளி, பெருநிலக்காரர்கள் ஜமீன்தார்கள் பூர்ஷுவாக்கள்.) எதிர்ப்பை அடக்கித் தீர தொழிலாள சர்வாதிகாரம் மிக மிக அவசியம் என சரித்திரம் கூறுகிறது. சர்வாதிகாரத்தை எதிர்த்து, உண்மையான ஜனநாயகத்திற்காக தன் உயிரையும் அர்ப்பணம் செய்யத் தகுந்த சோஷியலிஸ்ட்கள் இன்று பல நாடுகளில், அடுத்தடுத்த கலகங்களின் மூலமும், உள்நாட்டு யுத்தங்களின் மூலமும், ஏதேச்சாதிகாரம் கொண்ட அரசையும் அடிமைச் சொந்தக்காரர்களையும் அடக்கியதின்மூலம், பூர்ஷுவாக்களின் ஆதிக்கத்தை ஓரளவிற்கு நசுக்கிச் செல்வாக்கு பெற்றிருக்கிறார்கள். காலத்திற்கேற்ப ஒவ்வொரு நாட்டு சோஷியலிஸ்டுகளும் அவர்களுடைய மகாநாடுகளிலும் பிரசங்கங்களிலும், ஆர்ப்பாட்டங்களிலும் துண்டுப் பிரசுரங்களிலும் புஸ்தகங்களிலும் பூர்ஷுவாப் புரட்சியின் வர்க்கத் தன்மையை தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டி வருகிறார்கள். ஆகவே பூர்ஷுவா ஜனநாயகமானது "உண்மை ஜன நாயக"த்திற்கு வக்காலத்து வாங்கிப்பேசி, தொழிலாள சர்வாதிகாரத்தைப் பொதுவாக சர்வாதிகாரம் எனத் திரித்துக் கூறி, மக்களை ஏமாற்றுவது சோஷியலிஸத்திற்கு ஊறு செய்வதாகும். மேலும் அது தொழிலாள வர்க்கத்திற்கே, அவர்களின் உரிமைகளை வழங்க மறுப்பதும், தங்களுடைய சீர்திருத்த மனப்பான்மைக்கு நிரந்தரமாக இந்த உலகத்தில் இடந் தேடுவதுமாகும். ஆனால் உலகமெங்கும் பூர்ஷுவா சீர்திருத்தத்திற்கு சாவுமணி அடித்தாய் விட்டது என்பதை அவர்கள் கண்டு கொண்டார்களில்லை போலும்.

பூர்ஷுவாக்களின் நாகரிகம், ஜனநாயகம், சட்டசபைக் கொள்கை முதலியவைகளின் வர்க்கத் தன்மையை சுட்டிக் காட்டுவதின் மூலம், சோஷியலிஸ்ட்கள், விஞ்ஞான ரீதியாக மார்க்ஸும், ஏங்கல்ஸும் உலகிற்கு எடுத்துக்காட்டிய பழைய பியுடல் சமூகத்தின் அழிவில் முளைத்த "தற்கால பூர்ஷுவா சமூகமானது தன் வர்க்க வேற்றுமை உணர்ச்சியை ஒழிக்கவில்லை. அதற்குப்பதிலாக, புதிய வர்க்கங்களையும், புதிய முறையான அடக்கு முறைகளையும், புதிய முறையான போராட்டங்களையும் இவ்வுலகிற்கு வழங்கி வருகின்றன." (கம்யூனிஸ்ட் அறிக்கை) என்பதைத் தெளிவாகக் கூறி தொழிலாளவர்க்கம் உலகத்தின் பெரும்பாலான மக்கள், எப்படி ஒரு சிறு பான்மைக்கூட்டத்தாராகிய பூர்ஷுவாக்கள், பெருநிலக்காரர்கள், பாங்கர்கள், ஜமீன்தார்கள் முதலியவர்களுடைய கையில் சிக்குண்டு அவஸ்தைப் படுகிறது என்பதையும் சுட்டிக் காட்டுகிறார்கள்.

தொழிலாள வர்க்கத்திற்கே உழைப்பது என்ற தீர்க்கமான முடிவுக்கு வந்த, எந்த ஒரு உண்மையான மார்க்ஸிஸ்டும், தொழிலாள சர்வாதிகாரத்திற்கு எதிராக "ஜன நாயகத்"திற்கு பரிந்து பேசமாட்டான். ஆனால் புரட்சி உத்வேகம் கொண்ட தொழிலாளர்கள் இந்த அடக்கு முறை ஆயுதமாகிய பூர்ஷுவா வர்க்கத்தை முறியடிக்க வீறு கொண்டு எழும்பொழுது, சிலர் தயவு தாட்சண்ய வழவழப்பினாலும், அரசியல் சூன்யத்தாலும் தொழிலாளர் சர்வாதிகாரத்தை எதிர்த்து 'ஜன நாயகத்'திற்கு பரிந்து பேசி,ஜனநாயக அரசாட்சியில் தொழிலாளர்களை முதலாளிகள் அடக்குவதில்லை என எண்ணி தொழிலாளர்கள் பலரை அந்த "ஜனநாயகத்திற்கு இணங்கும்படி செய்வதால், அவர்கள் சோஷியலிஸத் துரோகிகளாகிறார்கள்.

ஆகவே, இந்தப் போலி 'ஜனநாயக'ப்பேச்சு, பூர்ஷுவாக்களையும் அவர்களது ஏகபோக அநுகூலங்களையும் காப்பாற்றுவதற்காகத்தான் பேசப்படுகிறது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. "சாதாரண சுத்த ஜனநாயக" வாதிகள், 'கூட்டம் கூடும் சுதந்தரம்' வேண்டுமென்கிறார்கள். வர்க்க உணர்ச்சி கொண்ட எந்த உழைப்பாளியும், சுரண்டுபவர்களுக்கு, அவர்கள் தங்கள் "உரிமைகளைக்" காப்பாற்றிக் கொள்ள கச்சை கட்டி நிற்கும் பொழுது, 'கூட்டம் கூடும் உரிமை' வழங்கப்படுமானால், அது தற்கொலைக் கொப்பாகும் என்பதை நன்கு உணர்வான்.மேலும் "ஜனநாயக நாடுகள் எனக் கூறப்படும் நாடுகளில், சர்வ உரிமைகளும் சமூகத்தின் சிறுபான்மையோராகிய முதலாளி வர்க்கத்திற்கே வழங்கப்படுகின்றன. ஆனால் தொழிலாள வர்க்கத்திற்கோ?.........உண்மையான ஜனநாயகம் வழங்கப்பட வேண்டுமானால், முதலாளி வர்க்கம் அடியுடன் ஒழிக்கப்பட வேண்டும்.

இந்தச் சந்தர்பத்தில், வாசகர்கள், கல்கத்தா சணல் தொழிலாளர்கள், வேலை நிறுத்தத்தின் போதும், பஞ்சாப், விவசாயிகளின் வேலை நிறுத்தத்தின்போதும், இன்னும் இந்நாட்டின் ஆயிரக் கணக்கான வேலை நிறுத்தங்களின்போதும், தொழிலாளர்களுக்கு கூட்டம் கூடும் உரிமை அளிக்கப்பட்டதா? தொழிலாளர் ஊர்வலங்கள் அனுமதிக்கப் பட்டனவா? என்பதை நோக்குக. இவைகளுக்குப் பதிலாக தொழிலாளர்கள், தடியடிக்கும் துப்பாக்கிப் பிரயோகத்திற்கும் உள்ளானார்கள். இதுதான் 'கூட்டம் கூடும் உரிமை' பூர்ஷுவா ஜன நாயகத்தில். பூர்ஷுவாக்களின் ஆணவம் அடக்கப்படாமல், 'ஜனநாயகம்' என்று பேசுவதெல்லாம் சுத்த ஹம்பக். தொழிலாளர்கள் தங்கள் குறைகளை நிவர்த்தித்துக் கொள்ளப் போராடினார்களேயானால், அவர்களுக்கு சிறைவாசமும், தூக்கு தண்டனையும், துப்பாக்கியால் சுட்டுத் தள்ளுவதும் தடியடிப் பிரயோகமும் தாராளமாக, சர்வசாதாரணமாய்க் கிடைக்கின்றன இந்த 'ஜனநாயக' ஆட்சியில். மேற்கூறிய சுயசிரமஜீவிகள் ஜனசமூகத்தின் நூற்றுக்குத் தொண்ணூறு மக்கள் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்க.

முதலாளித்துவ 'ஜனநாயகத்'தின் சுயரூபத்தை மகாயுத்தத்திற்கு முன்னமேயே சரித்திரம் எடுத்துக் காட்டியுள்ளது. 'நாகரீகம்' மிகுந்த முதலாளித்துவ நாடுகளில் "சுத்த சாதாரண ஜன நாயகம்" என்னும் பெயரால் பல தொழிலாளத் தலைவர்கள், கம்யூனிஸ்ட்கள், பொது ஜன அமைதிக்கு பங்கம் விளைவிப்பவர்கள் எனக் கூறப்பட்டு, கொடுமையான அடக்குமுறைகளுக்கும் தண்டனைகளுக்கும் உள்ளாக்கப்படுகிறார்கள். அதே சமயத்தில் தொழிலாளர் ஆட்சி நர்த்தனம் செய்யும் சோவியத் ரஷ்யாவில் ஒரு சில துரோகிகளை தண்டனைக்குள்ளாக்கினால் "பாருங்கள் தொழிலாள சர்வாதிகாரத்தின் அட்டூழியத்தை" என ஆடு நனைகிறதே என்று ஓநாய் ஊளையிட்ட கதைபோல் தினசரி கூக்குரலிடுகிறார்கள். முதலாளிகளும் அவர்களது கூலிகளும். ஆனால் இக்கூக்குரல் இருக்குத் தான் செய்யும் முதலாளித்துவம் இவ்வுலகில் உள்ளவரை. இந்த நிலையில் பரசிரம ஜீவிகளை அடக்கி ஒடுக்க மட்டுமல்ல இந்த தொழிலாள சர்வாதிகாரம். முதலாளி சர்வாதிகாரத்திலிருந்தும் அதனால் ஏற்படும் யுத்தங்களிலிருந்தும் மக்களைக் காப்பாற்றவும், தொழிலாள சர்வாதிகாரம் அந்த மாற்ற காலத்திற்கு (Transitional period) மிக அவசியம். மேலும், ஆயுதந்தாங்கி எதிர்க்கும் அந்தப் பணக்காரக் கும்பல்களை எதிர்க்க மற்ற வர்க்கங்களின் சர்வாதிகாரத்தைப் போல்தான் தொழிலா சர்வாதிகாரம் இருக்கிறது. ஆனால் அடிப்படையான வித்தியாசம், மற்ற வர்க்கங்களின் சர்வாதிகாரம் மக்களில் நூற்றுக்கு தொண்ணூறு பேரை, அடக்கி ஒடுக்கி, உரிமைகளை பறி முதல் செய்வதில் கண்ணுங் கருத்து

((18-ம் பக்கம் பார்க்க)

# கிராம வாழ்க்கையைச் சீர் செய்வதெப்படி?

N. S. சிவசுப்பிரமணியம். M. A.

நம் நாட்டில் முன்னேற்றத்தை கருதுபவர்களில் பலர், கிராம மேம்பாட்டை முக்கியமானதாகக் கருதுகின்றார்கள். அரசாங்க உதவியுடனும் எவ்வித இடர்பாடுகளில்லாமலும், தர்மோபதேசம் செய்பவர்களும், தேனீ வளர்த்தல், ஆடு வளர்த்தல் முதலியவைகளையே கிராம முன்னேற்றத்திற்கு வழியாகக் கொள்பவர்களும், கிராமப் பஞ்சாயத்துதான் கதி மோக்ஷமென சாதிப்பவர்களும், கூட்டுறவு இயக்கமொன்றே கிராம வாழ்க்கையை உயர்த்த வழியென வாதிப்பர்வர்களுமாக, பலர், குருடர்கள் யானையை அறிந்த விதம், கிராம பிரச்னையை அறிந்து வெளியிடுகின்றார்கள். இவர்கள் பலர் கூற்றிலும் சிறிதளவு உண்மை யிருப்பினும், உண்மை பிரச்னை அதல்ல. உண்மையை ஆராய்ந்து, கிராம நிலையை ஈதென அறிந்த பிறகே, அதைத் திருத்த வழி கோலுவது கூடும்.

இன்றைய கிராம வாழ்க்கையை, மனித வாழ்க்கையே அல்லவென துணிந்து சொல்லி விடலாம். இலக்ஷக் கணக்கில் கிராமங்கள் மிகுந்த நம் நாட்டின் வாழ்க்கையைப் பற்றியும் அதே துணிந்து விடலாம். என் ? மனித வாழ்க்கை நிற்க உயிர் வாழ்க்கைக்கே போதிய வசதிகள் கிராமங்களிலில்லை. நாட்டு மக்களுக்கு உணவுப் பொருளை விளைவிப்போருக்கு வயிறார உண்ண உணவு கிடையாது. அவர்கள் சதையைப்பிழிய கடும் வேலை செய்த பிறகும், தலையைக் கீழே வைத்துப் படுக்க இருப்பிடமில்லை; கட்டத் துணியோ அரைக்கோவணத்திற்கும் அபாவம் தான். உயிர் வாழ்க்கை சௌகரியமான பிறகன்றோ மனித வாழ்க்கையைப் பற்றி சிந்திக்க முடியும். மனிதன், அறிவு படைத்துவிளங்குவதால், அதை வளர்க்கவும் அதனால் அவன் வாழ்க்கை பயன்படவுமிருக்குமானால் அவன் மனித வாழ்க்கையை வாழ்வதாகச் சொல்ல முடியும். அமைதி, நம்பிக்கை, நாகரீகம் நல்லொழுக்கம், கலை, ஞானம் இவை பலவும் படிப்படியாக ஒன்றின் பின் ஒன்றாக, மனிதனுக்குத் துணை செய்வன. ஆயின், வானில் பறக்கும் பறவைகளுக்கும், காட்டில் மேயும் மாக்களுக்குமுள்ள நிச்சயமுமில்லாமல், ஒருவன் வாழவேண்டின் அவன் மனித வாழ்க்கையைத் தொடங்கவே முடியாது. இன்று கிராமத்திலுள்ள வாழ்க்கைமுறை நிறைந்த மனித வாழ்க்கை முறையல்ல, மிருக வாழ்க்கை முறைதான் என்று துணிந்து விடலாம்.

உண்டி, உடுக்கை இருக்கை இவைகளுக்காக நலிபவர்கள் நிலை கேவலமானதே. சமூக உணர்ச்சி, சமூக வாழ்க்கை இவை அங்கு சிதறுண்டு கிடக்கின்றன. சமயமாசாரங்கள் பழக்க வழக்கங்கள், இவை வறுமையில் தோன்றியவை யாகையால், ஒருவரிடமுள்ளதைப்பிறர் கைப்பற்ற உதவுவன வாகவே தோன்றும். நாகரீகமே தலையெடுக்காது. எழுத்து வாசனையும் அங்கு வீசாது; அதனால் அறிவு வளர்ச்சியும் அங்குஇல்லை. நாகரீகத்தாலோ, அறிவாலோ தோன்றிய பல வாழ்க்கை வசதிகளு மில்லாமல், இயற்கையின் நிறைவுமின்றி, மனித வாழ்க்கையே அங்கு நலிகின்றது. வறுமை அறிவை மாய்த்து, ஏதோ, வருவதையெல்லாம் ஏற்கும் திக்கற்ற நிலைமைக்கு மனிதனைத் தள்ளி விடுகின்றது. நகர புறங்களிலுள்ளோர், கிராமங்களின் இயற்கை அழகையும், இங்குள்ள அமைதியையும், ஒழுக்கத்தையும் புகழ்ந்து வருவதை நாம் கேட்கின்றோமாயினும், அது கவிக்கூற்றாக முடிவதை ஒரு நொடியில் அறிந்து விடுகின்றோம். 'இக்கரைக்கு அக்கரைப் பச்சையாக' விளங்குவதால் அவர்கள் அவ்விதம் சொல்வதன்றி உண்மையைச் செவ்வனே அறிந்தல்ல. நகர்ப்புறக்கொந்தளிப்பும் ஆரவாரமும் கிராமத்தில் இல்லை, அமைதிதானிருக்கின்றது; ஆயின் அவ்வமைதி, உயிர் நிறைந்த அமைதியாகாது, உயிரற்ற அமைதியாக நிற்கின்றது. நிறைவுடன் கூடிய அமைதியே அமைதி யல்லாது, குறைவுக் களஞ்சியத்தில் அமைதி நிறுவ முடியாது. அறியாமை, இன்மை இரண்டும்கூடி, மனிதர்களின் உணர்ச்சிகளையும், அறிவையும் மழுங்கவும், மாறவும் செய்துவிட்டதால், மனித வாழ்க்கையே ஈதென அறியாமல், ஏதோ காலங்கடப்பதையே குறியாகக் கொள்கின்றார்கள் கிராமவாசிகள். நகர்ப்புறங்களில் வறுமை யிருப்பினும், அதற்கருகே நிறைவு காணப்படுவதால் ஒருவருக்கொருவர் போட்டியிடவும், நிலைமை மாறவும் வழியுண்டு. கிராமங்களில் எங்கும்; கண்ணிற் கெட்டிய வரையிலும் ஓரே வறுமை நிலைப்பதால், நிறையப்பெறுவதற்குச் சிந்தனையும் எழவழியில்லை. எதாவது காலங்களில், வரட்சியினால் உணவின்றி வாடும் விலங்கினங்கள் காடுகளில் களைத்து அயர்வதைப் போல, எப்பொழுதும் கிராமங்களில் மனிதன் களைத்து வாடி வதங்குகின்றான்.

இக்கொடிய வறுமைக்குக் காரணங்களெவை? அவைகளை எவ்வாறு அகற்ற முடியுமென ஆராய்ந்தறிவது கிராம முன்னேற்றத் தொண்டிற்கு முதற்படியாகும். கிராமங்களில் பெருவாரியாக உள்ளது ஓரே தொழில், உழுது பயிரிடுவது. உழவுத் தொழில் இயற்கையை ஒட்டியே செல்ல வேண்டுவதொன்று. மனிதனுடைய திறமையால் அத்தொழிலை எவ்வளவிற்குச் செம்மைபடுத்தினும், இயற்கைதான் முடிவாக பாட்டின் பயனை நியதி செய்யும் அதிகாரி. அவ்வுழவுத் தொழிலும், பிற நாடுகளிலுள்ளதைப் போன்று நம் நாட்டில் சீர்செய்யப்படவில்லை. நீரின்று பயிர்கள் விளைவதில்லையானால், பாசனத்தை ஏற்படுத்தி, வானை நோக்காது உழவு செய்யலாம். அவ்விதமாக நீர்வளம் நிறைந்த நம் நாட்டு உழவுப் பரப்பில் பத்திலொரு பங்குதான். பத்தில் ஒன்பது பங்கு நிலத்தில் விதையிடவோ, அறுவடை செய்யவோ, வானையே நம்பியாக வேண்டும். மழையின் கோலம் ஈதென எளிதில் தெரிந்துகொள்ளக்கூடிய தொன்றன்று. மழை பெய்யாமலோ, அதிகம் பெய்தோ உழவுத் தொழிலைப் பூராவும் கெடுத்து விடலாம். மழை காலத்திலின்றேல், வானைப் பார்த்து, மனம் கசிய மக்களை மாய்க்கின்றது. அதிகம் பெய்தாலோ, பன்னாட் பாட்டை பாழடைத்து விடுகின்றது. மழையை எதிர்பாராமலும், அது மிகுந்தால் அதனால் இடர்ப்படாமலுமிருக்க அநேக சாஸ்திரீய முறைகளை பிற நாட்டார் கையாண்டு, மனித அறிவையும் திறனையும் பயன்படுத்தி யிருக்கின்றார்கள். நம் நாட்டில் அவ்விதமொன்றுமில்லை. நீர்வளத்தை விடினும், பூச்சிகள், பயிர் நோய்கள், காற்று, பனி இவைகளால் பயிர்கள் பாதிக்கப்படுகின்றன. இவ்விதமாக இயற்கையின் முழு ஆதீனமும் உழவுத் தொழிலிலுள்ளது.

பெரிய இயந்திரங்களைக்கொண்டும், இரசாயனங்களின் உதவியைக் கொண்டும், உழவை மனிதன் ஆதீனத்தில் வைத்து, அதனின்றும் அதிக விளைவை அயல் நாடுகளில் பெறுகின்றார்கள். நம் நாட்டில் பல தொழில்களையும் இழந்து நூற்றுக்கெண்பதின்பர் உழவுத் தொழிலிற்கே வந்து குவிந்துவிட்டார்கள். மனிதன் தன் வலிவை முற்றும் உதவி உழவு செய்தும், இறுதியில் மிகச்சிறு கூலியைப் பெறுகின்றான். அதுவும் நிலையற்றதாயிருக்கின்றது. ஏதோ, எப்பொழுதோ ஒரு சிறிது கிடைக்குமென்னும் நம்பிக்கையுடன் உழவர்கள் வாழவேண்டி யிருக்கின்றது.

இவ்வளவு உறுதியற்ற, இலாபமல்லாத தொழிலாயினும், அத் தொழிலிலாவது, உழவனுக்கு என்றும் வேலையிருக்கின்றதா ? அதுவுமில்லை ஒரு ஆண்டில் சில நாட்களே, கடுமையாகப் பாடுபட்டு விட்டு, மற்ற காலத்தை வீண் போக்க வேண்டி ஏற்படுகிறது. பாடுபட மனமில்லாததாலல்ல, பாடுபட, இல்லாமையால்தான். பாடு படவும் வழியின்றி சோம்பி, ஏதோ கிடைப்பதைப் பெறுவதாலே தான் கிராம வாசிகள் எளியவர்களாயிருக்கின்றார்கள். பயனற்ற தொழிலில் பலபேர் திரள வறுமைக்குக் காரணம் தேடுவானேன்.

சரி, நிலையில்லாததாயினும் சிறிதளவு கிடைப்பதாவது எளியவனுக்குக் கிடைக்கின்றதாயின், அதாவது அவனுக்கு ஓரளவிற்கு முன்னேற வழியாகும். விவசாயிக்குக்கிடைக்கும் சிறு வருமானத்தை, அவன் இவ்வளவென கணக்கறிவதற்கு முன்பே அதைப் பலர் பற்றிக் கொள்கின்றார்கள். அவனது கடும்பாடு இல்லாவிட்டால் ஒன்றும்—விளைந்த சிறிதும்—விளைந்திராது. ஆனால் விளைவு அறுவடையாகும் வரை மறைந்திருந்த ஒருவன் அழைப்பற்று குதித்து வருகின்றான். அவன் தான் நிலக்காரன், அவன் எங்கோ, சௌகரியமாகத் தன் வாழ்வை நடத்துகின்றான். உழவின் அல்லலை உணரவும் செய்யாதவன், இன்று உழவின் பயனைப்பறிக்க நில உரிமையுடன் குதித்தெழுகின்றான். பாட்டினால் விளைந்ததாயினும், பாடில்லாவிட்டால் ஒன்றும் விளையாததாயினும், பாடுபடாத இந்த நில உரிமைக்காரன், விளைவின் பெரும் பகுதியை இன்று பற்றிவிடுகின்றான். நம் கிராமங்களில் சொந்த நிலமுள்ளோர் சிலர், பலர் உழவுத் தொழிலையே மேற்கொளினும், விவசாயக் கூலிகள் தான். குத்தகை, வாரம் முதலிய பல பெயர்களுடனும், முறைகளிலும் அவர்கள் பயிரிட்டாலும், உண்[illegible] அவர்களுக்கிடைப்பது கூலி ஒன்றுதான்.

சொந்த நிலக்காரன் சிலரிருக்கின்றனர்; அவர்கள் தங்கள் பாட்டின் பயனைத்தாங்களே வைத்துண்ணலாம். ஆயின் அவர்க

(13-ம் பக்கம் பார்க்க)

## சீன-ஜப்பான் யுத்தம்

# செஞ்சேனையின் யு

[இன்று நட... துள்
பான் யுத்தத்தில், சீ
வேசத்துடன் போ
அநேக இடங்களி
கிறது. மேற்படி
மாதங்களில் போ
யாண்ட முறைகளை
சீனக் கம்யூனிஸ்டு
காரியதரிசியுமான தோ
கிறார்.

### யுத்தகளம் 1.

போன வருஷம் ஆகஸ்ட் மாதக் கடைசியில் போர்முனைக்குச் செல்லுமாறு தளகர்த்தர் சியாங் - கே - ஷேக் அவர்களிடமிருந்து எங்களுக்கு உத்திரவு கிடைத்தது. எங்கள் சேனையாகிய 'எட்டாவது பிரிவு சேனை' மஞ்சள் நதியைக் கடந்து வடக்கு நோக்கிச் சென்றது. போக்குவரத்து சாதனங்களின் குறைவினால் போர்க்களத்திற்குச் சீக்கிரம் செல்ல முடியவில்லை. ஜப்பானிய துருப்புகளோடு நான்கு நாட்கள் போர் நடந்தது.

எங்களை எதிர்த்த ஜப்பானிய துருப்புகளுக்கு அதிக யுத்தப் பயிற்சியோ அல்லது கடுமையான சத்ருக்களுடன் போர் செய்ய சந்தர்ப்பமோ வாய்க்கவில்லை. ஆகையால் எங்களை அலட்சியஞ் செய்தவர்களாயிருந்தார்கள். அத்தருணத்தில் அவர்கள் அறியாத வண்ணம் அவர்களை பின்னோக்கியோ முன்னேறச் செல்லவோ முடியாமற் செய்து, நாங்கள் துப்பாக்கிகளைக்கொண்டு எதிர்த்து அவர்கள் கைவசமிருந்த பிரதேசத்தின் முக்கால் பாகத்தைப் பிடித்துவிட்டோம்.

ஜப்பானியரின் யுத்த தந்திரங்கள் மிக சர்வ சாதாரணமானவை. முன்புறத்தி லிருக்கும் சேனை சண்டை செய்து கொண்டிருந்த பொழுது பின்னணியிலிருந்த துருப்புகள் ஜயித்த இடங்களைப் பாதுகாப்பதற்கு ஒருவித ஏற்பாடுகளையும் செய்யாமல் முன்னணியைத் தொடர்ந்து கொண்டே போய்விட்டன. ஆதலால் நாங்கள் பின் புறமாக வந்து அவர்கள் ஜெயித்த விடங்களையெல்லாம் கைப்பற்றி விட்டோம்.

ஜப்பானிய சேனை எங்கள் சேனையைக் காட்டிலும் மிகப் பெரியதாயும், யந்திர சாதனங்கள் உள்ளவைகளாகவும் இருந்த போதிலும் எங்களைத் தோற்கடிக்க முடியவில்லை. ஏனென்றால், நாங்கள் அவர்களுடன் நேருக்கு நேராக நின்று எதிர்த்துப் பெரிய போர் நடப்பதற்குச் சந்தர்ப்பம் கொடுக்கவில்லை. அநேக இடங்களில் ஒளிந்திருந்து ஜப்பானியர்களை சிறு சிறு கூட்டங்களின் உதவியால் எதிர்த்தோம். மேலும் நாங்கள் நினைத்த நிமிஷத்தில் எங்கள் தந்திரங்களை மாற்றிக் கொள்வதற்கு சக்தியுள்ளவர்களாயிருந்தோம்.

### யுத்தகளம் 2.

இந்தக் களத்தில் முன் புறத்தில் சண்டை போடுவதைத் தவிர குரங்கு முறைப்படி எதிரியின் பின் புறத்தைத் தாக்க அநேக சிறு படைகளை அனுப்பினோம்.

நாங்கள் அவர்களுடைய பெரிய முக்கியசாலையை உடைத்து ரயில்வேயையும் நாசம் செய்து அநேகமுறை ஜப்பானிய முக்கியஸ்தானத்தையும், அநேக டிப்போக்களையும் தாக்கினோம். நேரில் முற்போரில் எவ்வளவு எதிரி சைன்யத்தைக் கொன்று காயப்படுத்தி வீழ்த்தினோமோ அதே மாதிரி அவர்களுடைய அணிவகுப்புகளுக்குப் பின் புறத்திலும் ஆட்களையும் குதிரைகளையும் நாசப்படுத்தி ஆயிரம் டிரக்குகளுக்கு மேல் பிடித்து அவைகளில் நீண்டதொரு தளவாடங்களையும் கைப்பற்றினோம். மொத்தத்தில் 40 தடவை எதிரிகளைச் சிதற அடித்தோம். எங்களுடைய முக்கியமான செய்கைகள் யாங்மிங்பூவில் எதிரிகளைப் பூராவாகத் தோற்கடித்தது—20 ஏரோபிளேன்களை நாசப்படுத்தியது. கோஷயனுக்கும் யென்மென்க் வானுக்கும் மத்தியிலுள்ள சாலைமீது செய்த எதிர்ப்பு—அதில் யுத்த தளவாடங்களும் பெட்ரோலுமுள்ள அநேக டிரக்குகள் எங்கள் வசமாயின. எமன் பாதையைப் பிடித்துக் கொண்டு சில சாலைகளையும் பாலங்களையும் தகர்த்தோம். தவிர எதிரியின் விஸாப்புறங்களை சிங்கோவில் எதிர்த்ததால், நமது எதிரிகள் நமது சைன்யத்தில் முன்னணியைப் பக்கத்தில் வந்து எதிர்ப்பதால் பலம் குன்றும்படி செய்ய முடியாமல் போயிற்று.

இந்த முறை டாடங் முதலிய இடத்திலிருந்து எதிரிக்கு வரவு சாதனத்தைப் பூராவாகவும் உடைக்க முடியவில்லை. ஆனால், ஜப்பானியர்களை மிகுந்த சிர்கேடான நிலைமையில் கொண்டு வந்து விட்டோம். ஜப்பானிய டிர்க்குகள் ஒவ்வொன்றுக்கும் பின்னால் ஒரு எஞ்சினீயர்க் கூட்டம், ஆட்படை, குதிரைப் படை ஆகாயப் படை அதைத் தவிர தளவாடங்கள் எல்லாம் வந்தன. இவ்வளவு பந்தோபஸ்து இருந்தும்கூட, நாங்கள் பலமுறை அவர்களின் மத்தியில் தந்திரமாகப் புகுந்து கலக்கினோம். கடைசியில் எதிரி ஆகாரத்திற்கும் யுத்த சாமான்களுக்கும் ஏரோப்ளேன்களையே நம்பவேண்டியதாயிற்று. ஜப்பானிய ஏகாதிபத்ய சேனைக்கு இறைச்சியும், பிஸ்கோத்தும் கிடைக்காமற்போகவே சோளக்கஞ்சி சாப்பிட வேண்டியதாயிற்று.

அவர்களுடைய அணிகள் பின்புறம் திணிக்கப் பட்டதாலும், நாங்கள் முன்னணியில் தீரத்தோடு போரிட்டதாலும், 21 நாள் போர் நடந்தது. இது வட சீனாவின் எதிர்ப்பின் ஒரு மகத்தான சம்பவம். இப்படி ஓயாமலும் கொஞ்சம் கொஞ்சமாகவும் எதிரியைப் பலம் குன்றி ஓயும்படி செய்ததால் நல்ல வெற்றி கிடைத்திருக்க வேண்டியது. ஆனால் கீழ் ஷான்சி சம்பவம் குறுக்கிட்டது.

இந்தச் சண்டையில் நாம் அறிந்து கொண்டது. திறம் பெற்ற எதிரியை, நீண்டநாள் ஓரிடத்தில் சண்டையில் தோற்கடிக்க வேண்டுமானால், நாம் எதிரிக்குப் பின்புறம் வெகுவாக சுறுசுறுப்புடன் வேலை செய்து அவர்களுடைய சாமான் உணவுகள் ஸப்ளையைக் குலைக்கவேண்டியது. ஏனென்றால் எவ்வளவுக்கெவ்வளவு ஒரு சைன்யம் யந்திர மயமாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது வெளியிலிருந்து தளவாட உணவு ஸப்ளைகள்வரும் ஸாதனங்களை நம்பியிருக்கிறது. இந்த சப்ளை சாதனங்களை முறித்துவிட்டால், இயந்திர சைன்யம் சாகிறது. ஒரு சைன்யம் தன் போக்குவரவு சாதனங்களையும் சமாசாரத் துறைகளையும் காப்பாற்ற வேண்டுமாதலால் ஆட்படையை பின்னணிக்குக் கொண்டுபோக வேண்டியிருக்கிறது. ஆகையால் அதன் முன்னணியின் பலம் குன்றிவிடுகிறது.

எதிரியின் போக்குவரவு சாதனத்திற்கு எதிராக வேலை செய்யும் சைன்யப் பிரிவுகளுக்குப் போதுமான ஆட்பலமும் முஸ்தீப்புகளும் இருக்கவேண்டும். மிகவும் சுறுசுறுப்பாயிருந்து எல்லாவிதமான சந்தர்ப்பங்களையும் உபயோகித்துக் கொள்ள வேண்டும். சீக்கிரம் தீர்மானமான முடிவுக்கு வரவேண்டும். ரோடுகளைத் தகர்ப்பதில் நிபுணர்களாயிருக்கவேண்டும். தங்களை மறைத்துக்கொள்ள பந்தோபஸ்துகள் செய்வதில் தேர்ச்சி பெற்றவர்களாயிருக்கவேண்டும். இப்படி சிறு பிரிவுகள் அடிக்கடி ஜப்பானியத் துருப்புகளையும் வண்டிகளையும் அவைகளுடைய யந்திர சைன்னியங்களை ஏற்றிச் செல்லும் டிரக்குகளையும் தகர்ப்பதால், நமது நிரந்தரப் படைக்குப் போதிய உற்சாகமும் ஊக்கமும் உண்டாகும். இந்த சைன்யப் பிரிவுகள் எல்லாக் கட்டிடங்களையும், டிப்போக்களையும், ரயில்வேக்களையும், பாலங்களையும் போக்குவரவு துறைகளையும் நாசமாக்க வேண்டும். இந்த மாதிரி எதிரிக்குப் பின்புறத்தில் அடிக்கடி சிறியதோ பெரியதோ ஜயமடைந்து கொண்டேயிருக்க வேண்டும்.

இந்தக் குரங்கு முறையில் எதிரிக்கு ஏற்படும் நஷ்டங்கள் நேர்முகமான எதிர்ப்பிலிருந்துண்டாவதைக் காட்டிலும் அதிகமாகவே யிருக்கும்—தவிர எதிரிக்குக்கஷ்டங்களும் அதிகம். கொஞ்சம் கொஞ்சமாக எதிரியை ஓய்ந்து பலவீனமடையச் செய்தாலும் போதும். எதிரிக்குப் பின்புறத்தில் ஒவ்வொரு ரயில்வேயும், பெரிய சாலையும் தாக்கப்பட்டுக் கொண்டேயிருந்தால், கைவசமிருக்கும் அற்ப சாதனங்களோடு வெகுநாட்கள் போர் செய்ய முடியாது. ஸப்ளையில்லாமல் மிகப் பெரிய யந்திரங்கள் பிரயோஜன மற்றதாகி விடும். முன் போரிலிருக்கும் நமது சைன்யங்கள் இந்த சந்தர்ப்பங்களைப் பயன் படுத்திக் கொண்டு சண்டையை வெகு நாட்களுக்கு இழுக்கமுடியும். எதிரியை ஓயவைத்து நாசமடித்துவிடலாம். ஒரு எளிய தேசத்தை ஒரு வலிய தேசம் எதிர்க்

# யுத்த தந்திரங்கள்

[... நடந்துவரும் சீன-ஜப் ... ல், ... செஞ்சேனை வீரா ... போ... செய்து ஜப்பானை ... ங்களில் முறியடித்திருக் ... படி ... சேனை, முதல் ஆறு ... போ... முனைகளில் கை ... ஐக்களை அந்தன் தலைவரும் ... ிஸ்டு கட்சியின் பொதுக் ... ான தோழர் சூடே விவரிக்

—ஆ · ர்]

கும்போது வெகு விஸ்தாரமான பிரதேசச் சண்டையில் இந்த மாதிரி முறைகளைத் தான் கையாளவேண்டும்.

## யுத்தகளம் 3.

நியாங்ட்ஸெக்வான் சண்டை ஒரு நெருக்கடியான நிலைமையிலிருந்தபோது ஜப்பானிய சேனையின் விலாப்புறத்தை எதிர்த்து கிழ் ஷ-ன்ஸியில் எங்களுடைய அணி வகுப்புகளைப் பலப்படுத்தும் நோக்கத்துடன் செங்டிங்டையுவன் ரெயில்வேக்குத் தெற்கில் பலமான ஒரு வகுப்பை அனுப்பினோம். ஜப்பானியர்களின் 10,19 வகுப்புச் சேனைகள் மேஜர் ஜெனரல் யமாகிஷிவசம் இருந்தன. அவை நவம்பர் மாதம் 2-ம் தேதி பிங்டிங்-கும் அதன் மேற்குப் புறத்துக்கும் புகுந்து எங்கள் மீது போரிட்டன. முன்னணியிலிருந்து ஒரு சிறிய படையைக் கொண்டு நாங்கள் எதிர்த்தோம். நாங்கள் மாடனூகோவிலில் தங்கி 24மணி நேரம் ஜபானியர்களைத் தாமதிக்கச் செய்து பல நபர்களையும் கொன்றோம். அவர்கள் முற்போக்கை எங்களால் தடுக்க முடியாமல் போகவே நாங்கள் ஒளிந்து சண்டையிடத் துடங்கினோம். க்வாங்கியாங்குக்கு அருகிய ஜப்பானிய சைன்யம் பாதி முன்னேறி காலாட்படைகளும் போனபிறகு நாங்கள் சைன்னிய மத்தியையும் உணவுப் பொருள்வண்டிகளையுப் தளகர்த்தரின் முக்கிய ஸ்தானத்தின் டிரக்குகளையும் வீரா வேசத்துடன் எதிர்த்தோம். எதிர் சைன்னியத்துக்கு இரு புறத்துக் கோடியிலும் காலாட் பலமிருந்தபோதிலும், நாங்கள் திடீரென்று தோன்றியதால் அவர்கள் கலங்கிப்போய் ஒரு பக்கமும் போக முடியவில்லை. ஆகையால் அவர்கள் தங்களைத் தற்காப்பு முறையில் அணிவகுத்துக் கொண்டு இரவும் பகலும் கழிக்க வேண்டியதாயிற்று; போய்க் கொண்டிருக்கும் சேனை (ஒழுங்கு) தவறி விட்டது. இரண்டு பக்கத்திலிருந்து வரும் பலங்கள் குழப்பத்தை உண்டாக்கின. நாங்கள் அவர்கள் மேற்குப் பக்கம் போக்கைத் தாமதிக்க எண்ணினோம். கொஞ்சம் சைன்யத்தையும் நாசம் செய்தோம். 7நாள் தாமதம் ஏற்பட்டது. மறுபடியும் இதேமாதிரி ஒளிந்து எதிர்ப்புக்குப் பயந்து அவர்கள் திரும்பி மேற்கே போகாமல் வடக்கு நோக்கிப் போனார்கள்.

பாடம்:—எங்களுடைய சிறிய வகுப்புகளைக் கொண்டு பெரிய ஜப்பானியத் துருப்புகளை எதிர்ப்பது கடினம். எங்கள் ஆயுதங்கள் கீழ்த்தரமானவை. ஆனால் நாங்கள் போய்க் கொண்டேயிருந்து எதிரியின் விலாப்பக்கங்களையும் பின் புறத்தையும் அவர்கள் முன்னேக்கிப் போகையில் எதிர்த்தால் நாம் அவர்கள் மத்தியில் குழப்பம் உண்டாக்க முடியும். கால தாமதம் செய்யலாம். கொஞ்சம் துருப்புகளையும் நாசமாக்கலாம். பெரிய சைன்யங்கள் போய்க் கொண்டிருக்கும் போது கொஞ்சம் குழப்பம் ஏற்பட்டாலும் கூட ஜப்பானிய சேனையின் யுத்த ஏற்பாடுகள் மாறிவிடும். இந்த மாதிரிப் போய்க்கொண்டிருக்கும் போது ஒரு சிறிய மாறுதல் செய்வது என்றால்கூட வெகு நேரம் பிடிக்கும். அவர்களுடைய தளவாடங்களுக்கும் ஆகாயப்படைகளுக்கும் ஒற்றுமை சரியாக இல்லாததால் அவர்கள் முற்போக்கைத் தடுக்க முடியும். நமக்கு பலம் ஜாஸ்தியாக இருந்தால் சேதங்கள் அதிகமாகவே இருக்கும்.

## யுத்தகளம் 4

எங்களுடைய குரங்கு சைன்யப்பகுதிகள் ஹப்பை பிரதேசத்தில் ஸெப்டம்பர்மீ 19உ வந்தன. ஜப்பானிய எதிரிகளோடு 25உ கை கலந்தன. அவைகள் ஹப்பைப் பிரதேசத்தில் புகுந்து 16 தேசங்களில் பரவி நின்றன. அவை விடாமல் எதிரியோடு சண்டைபோட்டு வேறு ஒரு உதவியில்லாமலே அவர்களின் பின் புறத்தையும் போக்குவரவு சாதனங்களையும் நாசமாக்கின. அவைகள் ரெயில்வேக்களைத் தகர்த்து ஜப்பானிய சப்ளை செய்யும் ரெயில் வண்டித் தொடர்களை தினந்தோறும் நாசம் செய்து சர்க்கார் பொம்மைகளைத் தகர்த்து எங்களுடைய ஸ்தலங்களைத் திரும்ப ஆக்கிரமித்து ஜனங்களிடையே படையைத் திரட்டின. இம்மாதிரி ஓயாமல் வேலை செய்ததிலும் ஜப்பானிய எதிர்ப்பு ஸ்தலம் ஒன்று ஏற்படுத்தி அங்கே உள்ள சேனைகளை ஒருமுகப் படுத்தியதைக் கண்ட ஜப்பானியப்படைகள் மிகக்கலவரமடைந்து மிக ஜாக்கிரதையாக வேலை செய்ய ஆரம்பித்தன. 30,0 0 ஜப்பானியப் படைகள் எங்கள் குரங்கு சைன்யத்தை நாசமாக்க அனுப்பப்பட்ட போதிலும் நாங்கள் அவைகளை அநேக சண்டைகளில் தோற்கடித்துவிட்டோம்.

எங்களுடைய சைன்யப் பகுதிகளில் இரண்டு ஸங் கீழும் யாங் கீழும் மற்றும் சில பைப்பிங் ஹாங்கோ ரெயில்வே பக்கத்திலும் பரவி நின்று எதிரியின் முதுகுப் புறத்தை ஊடுருவிச் சென்றன. அவைகளுடைய எதிர்ப்புமேல் எதிர்ப்பு ஜப்பானிய சைன்யத்தின் போக்கைத் தடை செய்ததுமல்லாமல் அவர்களுடைய யுத்த தந்திரங்களையும் நடை முறைகளையும் எங்களுக்குத் தெரிவித்தன. வட சைனாவிலுள்ள ஜனங்கள் எங்களுடைய முயற்சிகளைக் கண்டு தைரியமும் உற்சாகமும் அடைந்தார்கள். ஜப்பானிய ஆக்கிரமிப்பைத் தாங்களே எதிர்த்தார்கள். அங்கேயுள்ள பொம்மை நிர்வாகிகள் நேர்முகமாக ஜப்பானிய ஆக்கிரமிப்பாளர்களுக்கு உதவிசெய்ய தைரியம் கொள்ளாததினால் ஜப்பானியர்களுடைய கஷ்டங்கள் அதிகமாயின. தவிர எதிரிகள் ரயில்வேயிலுள்ள ஸ்டேஷன்களையும் டிப்போக்களையும் பாதுகாப்பதற்காக ரயில் பாதை பூராவிலும் சைனயங்களை நிறுவ வேண்டியதாயிற்று—

நாங்கள் அறிந்து கொண்டது: பலமுள்ள குரங்கு சேனை வகுப்புகளை புதிதாக ஆக்கிரமிக்கப்படும் பிரதேசங்களுக்கு அனுப்ப வேண்டும். வெகுதூரம் அவர்கள் பரவி, எதிரியின் முதுகுப் புறம் வரை போய் நமது நிர்வாகத்தை அந்தந்த பிரதேசங்களில் நிலை நிறுத்தி, ஜனங்களை ஒன்று திரட்டி எதிரிகளின் போக்கு வரவு சாதனங்களை முறித்து எதிரிகளின் போக்கையும், யுத்த முறைகளையும் கண்டு பிடிக்க வேண்டும். இந்தமாதிரி வேலை மிகவும் அத்தியாவசியமானது.

நமது வேலை நமக்குத் தெரிவிப்பது என்னவென்றால், ஆக்கிரமிக்கப்படும் பிரதேசத்தில் நமது குரங்கு சேனை சரியான முறையை அனுஷ்டித்து சரியான கட்டுப்பாட்டுடன் இருந்தால், அவைநின்று, ஒரு குரங்கு சைன்ய முஸ்தீப்பு ஸ்தலத்தை உற்பத்தி செய்து வளர்க்க முடியும்—ஜப்பானியருக்கு எதிராக ஒரு ஜனங்களின் கோட்டையை ஸ்தாபிக்கலாம். சிறிய குரங்குப் படைகள் ஜனங்களைப் போருக்குத் திரட்டி ஒழுங்குப் படுத்தியவுடன் பெரிய ஜப்பானிய சேனைக்கு அளவற்றத் தொந்தரவு கொடுக்கமுடியும்.

இறுதியில் தேசீய ஐக்கிய முன்னணியின் முக்கியத்தைப் பற்றி ஒரு வார்த்தை. இந்தத் தேசீய ஐக்கிய முன்னணியின் மூலம் வடகீழ் ஷான்ஸியில் நாங்கள் ஜப்பானியரை ராஜதந்திரமாகப் பிரித்து ஆள்வது என்னும் கொள்கையைத் தடை செய்து, அநேக பெரிய விஷயங்களை சாதித்தோம். பைப்பிங்குக்கு அருகாமையில் எங்களுடைய தேசீயக் கொடியை ஏற்றி எல்லா ஜப்பானிய, அல்லது. பொம்மை சர்க்கார் கொடியையும் தகர்த் தெறிந்தோம். எங்கெங்கே ஐக்கிய முன்னணி ஏற்படுத்தப்படவில்லையோ அங்கேயெல்லாம் இன்னும் நம்மைப் பிரித்துவிடுவதற்கு ஜப்பானியருக்கு சந்தர்ப்பம் இருக்கிறது. தேசீய ஐக்கிய முன்னணியை ஏற்படுத்தி பலப்படுத்திவதில் தான் சீனர்களுடைய முக்கியமாய் எல்லா சீன சைன்யத்தினுடைய கட்டுக்கோப்பான ஒற்றுமை இருக்கிறது. இதில் தான் நமது இறுதியில் ஜயம் பெற வேண்டியதற்கான ரகஸ்ய தத்துவமும் இருக்கிறது. சைனா ஜனங்களுடைய எல்லா சேனைகளும், முக்கியமாக, ஆக்கிரமிக்கப்படும் பிரதேசங்களிலிருக்கும் சேனைகள். இந்த லக்ஷியத்தைப் பெறுவதற்கான முயற்சிகளைச் செய்யவேண்டும்.

**சீன சுதந்திரம் நீடுழி வாழ்க!**

# தமிழ் மாகாணக் காங்கிரஸ் கமிட்டியும் அதன் வேலைகளும்

சி. பி. இளங்கோ

நமது மாகாண மக்கள் காங்கிரசிடம் அளவில்லா பக்தி கொண்டவர்கள். காங்கிரஸ் நடத்திய எல்லா சுதந்திரப் போரிலும் மாகாணப் பெண்கள், வாலிபர்கள் பொது மக்கள் யாவரும் கலந்து, சிறை சென்றும், தடியடிக் கிரையாகியும் பல தியாகங்கள் செய்துமிருக்கின்றனர்.

காங்கிரஸ் தனது நேரடியான போராட்டத்தை நிறுத்தி சட்டசபைகளையும், ஸ்தல ஸ்தாபனங்களையும் கைப்பற்றி, அதிலுள்ள பிற்போக்காளர்களையும், சுய நலமிகளையும், வகுப்பு வாதிகளையும் தொலைத்து மக்களுக்கு அவைகள் மூலம் எவ்வளவு சாதகங்கள் செய்ய முடியுமோ அவ்வளவும், செய்வதன்மூலம் முன்னைவிடப் பன்மடங்கு காங்கிரசிடம் மக்களுக்குள்ள, அன்பையும், நம்பிக்கையையும் அதிகரிக்கலாம் என்று முடிவு செய்து காங்கிரஸ் ஸ்தல ஸ்தாபனங்களில் நுழைவதென்ற பார்லிமெண்டரிக் கொள்கையைக் கடைப்பிடித்தது. இக் கொள்கையைக் காங்கிரஸ் கடைப்பிடித்ததும், இதற்கு முன் காங்கிரசின் பரம விரோதிகளாயிருந்த பலரும், காங்கிரஸ் என்ன சாதித்துவிடப் போகிறது என்று காங்கிரஸ்காரர்களை கேலிசெய்வதே, தங்கள் பிழைப்பாக வைத்திருந்த சிலரும், போராட்ட காலங்களில் பதுங்கி இருந்த பலரும், சுருங்கச்சொன்னால் தங்கள் காரியங்களைக் காங்கிரஸ் மூலம் சாதித்துக் கொள்ளலாம் என்று நினைத்த அனேக சுயநலமிகளும், வகுப்பு வாதிகளும் காங்கிரசினுள் வந்து புகுந்துவிட்டனர்.

மொத்தத்தில் பார்த்தால் இதுவரைக்கும் காங்கிரசி லிருந்த அங்கத்தினர்கள் எண்ணிக்கையைவிட இப்பொழுது மிக அதிகமாகவே எண்ணிக்கை யிருக்கிறது.

தேர்தல் காலத்தில் இந்நாட்டு விவசாயிகளும் தொழிலாளர்களும் இதர மக்களும் காங்கிரஸ் டிக்கட்டில் நிற்பவர்களுக்கே தங்கள் ஓட்டை அளித்து காங்கிரஸ் சார்பாக நின்ற அங்கத்தினர்கள் அத்தனை பேரும் வெற்றி யடையும்படிச் செய்து, காங்கிரஸிடம் தங்களுக்குள்ள அன்பையும், நம்பிக்கையும் மீண்டும் ஓர்முறை ஊர்ஜிதம் செய்தனர். இதைப் பார்த்து ஏகாதிபத்தியமும் அவர்களது தாசர்களும் பிரம்மித்தனர். தேர்தல் காலத்தில்கூட, அனேக செல்வந்தர்களும், ராஜாக்களும் ஜமீன்தார்களும் காங்கிரஸை எதிர்த்துத் தோல்வியடையச் செய்ய வேண்டுமென்று, முயற்சி செய்தனர். அத்தனையும் நாம் எதிர்பார்த்ததுபோல் பாழாயின. மேலும் இந்த மாகாணத்திலிருந்து வந்த ஜஸ்டிஸ் கட்சியும், தேர்தலுக்காகத் தோன்றி யிருந்த பணமூட்டைகளின் ஜனநாயகக் கட்சியும் போன இடம் தெரியாமல் புல் முளைத்துவிட்டது. தேர்தலுக்குப் பின்னால் வெற்றி விழாக்கள் கொண்டாடுவதிலும், திறப்பு விழாக்களுக்கும், மகாநாடுகளுக்கும், டீபார்ட்டி, கார்டன் பார்ட்டிகளுக்கு செல்வதிலுமே, வெற்றியடைந்த காங்கிரஸ் அங்கத்தினர்களில் பெரும் பாலோர் தங்கள் காலங்களைச் செலவழித்து வருகின்றனர். மாகாணக் காங்கிரஸ் கமிட்டியோ சட்டசபை வாதமொன்றே காங்கிரசின் குறிக்கோள் என்று எண்ணி, அட்ஹாக் கமிட்டிகள் நிறுவுவதிலும், எலக்ஷனுக்கு ஆட்கள் தேர்ந்தெடுப்பதிலும், பின் தலைவர் உப தலைவர்களை தேர்ந்தெடுப்பதிலும், இதில் ஏற்படும் தகராறுகளை விசாரணை செய்வதிலும், அதில் இவர் காங்கிரஸுக்கு விரோதமா யிருந்தார்; அவர் விரோதமாயிருந்தார்; ஆகையினால் 5, வருடத்திற்கு இவர் காங்கிரசில் அங்கம் வகிக்கக் கூடாதென்று முடிவு செய்வதும், அதை எதிர்த்து அவர்கள் அனுப்பும் பதிலை புனராலோசனை செய்வதிலுமே தனது பொழுதைப் போக்கி வந்ததால் சட்ட சபைக்கும் ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் வெளியில் நடக்க வேண்டிய பொதுஜனப் போராட்டத்தைக் கவனிப்பது யார். ? பொதுஜனப் போராட்டத்தை கவனிக்கத் தவறியதாலும், தேர்தலில் என்னை தேர்ந்தெடுக்கவில்லை, அவர் இன்று வந்தவர், நான் ஆதிகால முதல் அடிபட்டு சிறை சென்றவன் என்று கூறி காங்கிரஸிலிருக்கும் காங்கிரஸ் வாதிகளுக்குள்ளே பிளவேற்பட்டதாலும், எலக்ஷனில் காங்கிரஸ் பேரால் நின்று ஜெயித்த சில காங்கிரஸ் அங்கத்தினர்கள் காங்கிரஸ் கொள்கைக்கு விரோதமாக நடந்து, ஏன் காங்கிரஸிற்கு கூட துரோகம் செய்ததால், மூலை முடுக்குகளில் சிற்சில வகுப்புவாதிகள் தலைகாட்ட ஆரம்பித்து மாகாணத்தில் காங்கிரசைத் தூஷித்தும், காங்கிரஸ் மந்திரி சபையைக்கேலி செய்தும் காரியங்கள் நடத்த முற்படுகின்றனர். இந்த நிலையில் மாகாணக் காங்கிரஸ் கமிட்டி என்னசெய்ய வேண்டும் ?

1. காங்கிரஸின் லட்சியமாகிய பரிபூரண சுதந்திரக் கொள்கையை இந்த மாகாணத்திலுள்ள எல்லா மக்கள் மனதிலும் பசுமரத்தாணி போல் பதியச் செய்ய வேண்டும். ஆனால் தமிழ் மாகாண கா. காரியக் கமிட்டியோ தீவிர வாதிகளைக் காங்கிரசிலிருந்து விலக்கிவிட வேண்டுமென்ற பொருள்படும்படியான தீர்மானத்தை அ. இ. கா. க. சிபார்சு செய்திருப்பதிலிருந்து தமிழ் மகாணக்கமிட்டியின் போக்கு விளங்குகிறது. அ. இ. கா. க. அறிக்கைகளையும், அடிப்படையான நோக்கங்களையும்கூட நமது மகாணக் காங்கிரஸ்க் கமிட்டி புறக்கணித்திருப்பது வருந்தத் தக்கது. காங்கிரசிலுள்ள எல்லா தீவிரவாதிகளையும் இதற்கு முன் பார்த்து வந்த சந்தேகப் பார்வையை விடுத்து அவர்களும் இந்நாட்டில் நிலவிவரும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்குச் சவக்குழி தோண்டுவதில் காங்கிரசுடன் ஒத்துழைக்கிறார்கள் என்பதைப் புத்தி பூர்வமாய் உணர்ந்து ஐக்ய முன்னணியை உடனேயே ஏற்படுத்த வேண்டும்.

2. ஸ்ரீ. ஜவஹர் லக்னோ பெய்ஸ்பூர் காங்கிரசில் கூறியதைப் போன்று எல்லாக் காங்கிரஸ் கமிட்டிகளும் விவசாயிகளுடையவும், தொழிலாளர்களுடையவும், தினசரிப் போராட்டங்களில் பங்கு கொள்ள வேண்டுமென்று கூறி வந்ததை நடைமுறையில் இதுவரைக்கும் செய்யாதிருந்தது போலிராமல் உடனே செய்ய முன் வரவேண்டும். இதைக் கவனிப்பதற்கென்று மாகாணக் கமிட்டியில் தனியாக ஒரு சப் கமிட்டி நிறுவ வேண்டும். அதில் மாகாணத் தொழிலாளர் சங்கத்தின் பிரதிநிதிகளும், மாகாணக் கமிட்டி அங்கத்தினர்களும அங்கம் வகிக்க வேண்டும். (Collective affiliation.)

3. ஹிந்து முஸ்லீம் பிரச்னை நமது மாகாணத்தில் பிற மாகாணங்களைப் போல் இல்லாமலிருந்தாலும், இங்கும் முஸ்லீம் லீக் பிரசாரம் நடந்துவருகிறது. அத்துடன் காங்கிரஸின் விரோதிகளுக்கு அது தான் தற்போது ஒரு பிளாட்பாரமாகக்கூட யிருக்கிறது. ஆகவே மாகாணக் காங்கிரஸ் கமிட்டி பெய்ஸ்பூர் தீர்மானப்படி 'முஸ்லீம் பொது ஜனத் தொடர்பு' கமிட்டி ஒன்றை நிறுவி ஜரூராக வேலை செய்ய வேண்டும். மாகாணத்திலுள்ள பிரபல முஸ்லீம் தலைவர்களுடன் காங்கிரஸ் கொள்கைக்கோ, லட்சியத்திற்கோ, விரோதமில்லாமல் சமாதானம் செய்து கொள்வதும் நல்லது தான்.

4. அடுத்தாற் போன்று காங்கிரஸாலும் இந்தத் தேசத்திலுள்ள எல்லா முற்போக்கான, ஏன்சில வகுப்புவாத சபைகளால் கூட வேண்டாம் என்று வெறுத்துத் தள்ளப்பட்ட சமஷ்டியை எதிர்த்து பலமான பிரசாரத்தைச்செய்வதுடன். சமஷ்டித் திணிக்கப்பட்டால் அதை எதிர்த்துக் கடுமையானபோராட்டம் ஒன்றை நடத்துவதற்கும் மாகாணத்தைத் தயார் செய்து வைக்கும் வேலையிலிறங்க வேண்டும்.

வத்தலக்குண்டில் நடந்த நமது மாகாண மகாநாட்டில் "சமஷ்டி வந்தால் பகிரங்கமான போராட்டத்தைக் காங்கிரஸ் ஆரம்பிக்க வேண்டுமென்று அ. இ. கா. க. சிபார்சு செய்வதாகத் தீர்மானம் நிறைவேற்றிய நாம் இந்த விஷயத்தில் சும்மா யிருப்பது உசிதமா ?

5. நமது மாகாண மந்திரி சபையும், இதர ஸ்தல ஸ்தாபனங்களிலுமுள்ள காங்கிரஸ் அங்கத்தினர்கள் என்ன ஜனங்களுக்கு நன்மை செய்திருக்கிறார்களோ, அதைப் பிரசாரம்செய்ய வேண்டும். அதோடு ஜனங்களின் தேவை என்ன ? தேர்தல் காலத்தில் காங்கிரஸ் அளித்த வாக்குறுதிகள்எவை? அவைகளை எல்லாம் நிறைவேற்றும்படி மந்திரி சபையும் இதர ஸ்தல ஸ்தாபனங்களிலுள்ள அங்கத்தினர்களையும் அடிக்கடி ஞாபகப்படுத்தி வற்புறுத்தவேண்டும். அத்தோடு எல்லா ஜில்லா, தாலுகா, நகர காங்கிரஸ் கமிட்டிகளையும் சரியாகக் காங்கிரஸ் வேலைகளைச் செய்யும்படி வற்புறுத்தியும், கண்காணித்தும் வரவேண்டும். சட்டசபை அங்கத்தினர்களையும், ஸ்தல ஸ்தாபன அங்கத்தினர்களையும், தங்கள் தொகுதியிலுள்ள பொது மக்களிடம் தொடர்பு வைத்துக் கொள்ளும்படி வற்புறுத்த வேண்டும். இதைச் செய்வதன்மூலம் காங்கிரசின் பொதுஜனத் தொடர்புக் கொள்கை நிறைவேற்றியதாகும்.

6. ஐக்ய மாகாணக் காங்கிரஸ் கமிட்டி பெண்களுக்கென்று தனியாக ஒரு இலாகா வைத்து பெண்களை எல்லாம் காங்கிரசில் கொண்டு சேர்க்க முயற்சித்து வேலை செய்து வருவதைப் போன்று நமது மாகாணக் காங்கிரஸ்க் கமிட்டியும் பெண்களுக்கென்று தனியாக ஒரு இலாகா

(அடுத்த பக்கம் ப

# கிராம வாழ்க்கையைச் சீர் செய்வதெப்படி?

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

ளது பாடும் பிறரால் வேறு பெயர்களைக் கொண்டு வெளவ்வப்படுகின்றது. சொந்த நிலக்காரர்களில் கடன் படாதவர்களில்லை. கடனிற்கு வட்டியென, சொந்த நிலக்காரன் தன் பாட்டின் பயனை பிறனுக்குச் செலுத்தியாக வேண்டும். அதுபோக ஏதாவது மீது மானல், அவன் தன் சிறு நிலப்பரப்பிலிருந்து தன் வாழ்க்கைக்கே போதியதைப் பெருவிட்டாலும், அரசாங்கத்திற்கு நிலத் தீர்வையைச் செலுத்தியாக வேண்டும். வட்டி: வாயிதாபோக மீதம் பெறுகின்றவர்கள் மிகச் சிலரே, அவர்களுக்கு மீதுவதும் அவர் வாழ்க்கைக்குப் போதியதல்ல.

அதுவுமல்லாமல், நாணயச் செலாமணியுள்ள இக்காலத்து, விவசாயி தன் சிறு விளைவை ரூபாய், அணு, பைசாவிற்கு விற்று, அப்பணத்தைக்கொண்டு தான் தன் பொறுப்புகளைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். உழவன் விளை பொருளை விற்கும் போதும் அவனை வியாபாரி சூறையாடுகின்றான். ஆறுமாதமோ. ஆண்டோ, பாடுபட்டவன் பயனை, ஒரு நாள் வேலையுள்ள வியாபாரி தன தாக்கி விடுகின்றான். வியாபாரியின் இலாபமும் போக உழவனுக்கு மீதுவது பூஜ்யத்திற் கதிமாக இருக்காது.

நிலம் பெற ஊழ்வினை யற்றவர்களோ, அதில் நீண்டு பாடுபட்டு ஒரு பகுதியை அடைய நாணய மற்றவரெனக் கருதப்படுகின்றவரோ விவசாயத் தொழிலில் அன்னுனிடம் கூலிகளாக வேலை செய்கின்றார்கள். விவசாயத்தின் வருமானம் குறைவானதால், விவசாயக் கூலியும் மிகக் குறைந்ததே. உலகில் அங்கும் அதனில் குறைந்த கூலியும் கடுமையான பாடுமில்லை. அக்கூலிகளுக்கு என்னதான் கொடுக்கப்படுகின்றது, ஒரு வேளை உணவிற்கும் போதியது கிடைப்பதரிது. வார முழுதினும் வேலைக்கமர்ந்தாலும், மாதக் கணக்கிற்கு அமர்ந்தாலும் அதே விகிதத்தில கூலி கிடைக்கும் இவ்விவசாயக் கூலிகள் தான், எளியவர்கள் மிகுந்த கிராமங்களில் பரம எளியவர்கள், அவர் மனித உலகிலிருப்பினும் அவர்கள் வாழ்க்கை மிருக உலகைச் சார்ந்ததே.

கிராமங்களில் நேர் முகமாக விவசாயத்தில் ஈடு படாமலிருக்கும் சிலரும், மறைமுகமாக அதில் ஈடுபட்டவர்கள். கலப்பை சேர்க்கும் தச்சனும் கொல்லனும், பிற தொழிலாளிகளும் விவசாயத் தொழிலிலமர்ந்தவர்களை ஒட்டியே பிழைப்பதால் அவர்களும் எளிய நிலையிலிருக்கின்றார்கள். நவ நாகரீகம் புகாத காலத்தில், கிராம வாழ்க்கையில் என்ன நிறைவும் அமைதியும் இருந்தனவோ, அவை இன்று மறைந்தொழிந்துவிட்டன. கிராமங்களின் உற்பத்தி எவ்வளவு குறைந்ததேயாயினும் அதுவும் கிராமத்திலிருந்து வெளியேற்றப்படுகின்றது. பலர் பாட்டையும் தனதெனப் பரிக்கும் பெரிய நிலச்சுவான்தாரன், தன் கிராமத்தில் இன்று வாழ்வதில்லை. தன் வருவாயை ஒழுங்காக வசூலிக்க, கருணையற்ற சிப்பந்திகளை கிராமங்களில் வைத்துவிட்டு, உல்லாசமாகக்காலம் கழிக்க நகர்ப் புறங்களுக்குப் போய் விடுகின்றான். அவன் செலவெல்லாம், வீணே பாழாகின்றது. கிராமத்திலேயே இருந்தால், அது சிறிதளவு கிராம வாழ்க்கைக்கு பயன் படுவதாகும்.

ஆனால் இன்று அவன் கிராமத்தில் ஒரு தம்பிடியும் செலவு செய்வதில்லை. மேலும் கிராமங்கள் அரசாங்கத்திலிருந்து நாகரீக வாழ்க்கைக்காக பெறுவது ஒன்றுமில்லை யாயினும், நகர்ப்புறங்களையும் விட அதிகமாகக் கிராம விளைவு, வாயிதாவாக வெளியேற்றப்படுகின்றது.

# தமிழ் மாகாணக் காங்கிரஸ் கமிட்டியும் அதன் வேலைகளும்

(முன் பக்கத் தொடர்ச்சி)

வைத்து வேலை செய்ய உடனே முற்படவேண்டும்.

7. இவைகளை எல்லாம் திறமையாகச் செய்வதற்கும், சுதந்திரப் போராட்டம் வந்தால், அதில் உயிரை அர்ப்பணம் செய்வதற்கும், தயங்காத உறுதியும், ஊக்கமும், உணர்ச்சியும், கொண்ட ஒரு தேசீய சைன்யத்தை உடனே அமைக்கவேண்டும். அந்த சைன்யம் ஸ்ரீ. ஜவஹர் கூறியதைப் போன்று, "ஸ்பெயினிலும், சீனுவிலும் சுதந்திரத்திற்காகப் போராடக் கூடியதைப் போன்றிருக்க வேண்டும்" ராஷ்டிரபதி போஸும் தனது தலைமைப் பிரசங்கத்தில் "நல்ல பயிற்சி பெற்ற பெரிய தோர் தொண்டர் படை தேவை என்று வற்புறுத்தி யிருக்கிறார். பம்பாயில் கூடிய காங்கிரஸ் நிர்வாகக்கமிட்டி கூட தொண்டர் படை அமைக்க வேண்டுமென்று முடிவு செய்திருக்கிறது. இதை உடனே நடமுறையில் நடத்த நமது மாகாணக் காங்கிரஸ் கமிட்டி முற்பட வேண்டும்.

8. (1) இன்று பாண்டிச்சேரியில் தொழிலாளர்கள் துன்புறுத்தப் படுவதிலிருந்தும், அவர்களது தொழிற் சங்கங்களை சர்க்கார் அழிப்பதிலிருந்தும் அவர்களைக்காப்பாற்றப் பிரஞ் சிந்தியத் தொழிலாளர்களுக்கு வேண்டிய ஆதரவளிக்க வேண்டும்.

(2) திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் பொறுப்பாட்சிக் கிளர்ச்சி நடைபெறுவதை ஆகரித்தும், அங்கு சமஸ்தான சர்க்கார் செய்யும், அடக்கு முறையை எதிர்த்தும் தனது அபிப்பிராயத்தைப் பகிரங்கமாக வெளியிட வேண்டும்.

9. "ஏகாதிபத்திய யுத்தங்களில் இந்தியாத் தலையிடக் கூடாது. அதற்கு எந்த உதவியும் செய்யக் கூடாது. அதை நமது சுதந்திரப் போராட்டத்திற்கு சாதகமாய் உபயோகித்துக் கொள்ளவேண்டும்" என்ற காங்கிரஸ் தீர்மானத்தை இப்பொழுது எங்கும் பரப்பவேண்டும். இது மிகவும் முக்கியம் விரைவில் ஒரு உலக யுத்தம் கண்டிப்பாக வரப்போகிறது. அதில் பிரிட்டன் ஈடுபட்டால் நாம் என்ன செய்ய வேண்டுமென்பதை இப்பொழுதிருந்தே நமது மாகாண மக்களுக்கு ஞாபகப்படுத்த வேண்டுவது நமது மாகாணக் கமிட்டியின் வேலையே.

10. காங்கிரஸின் இந்த லட்சியங்களை எல்லாம் தெளிவாகக் கூறிப் போராடாமல், சுயராஜ்யம் அடைய முடியா தென்பதையும் தெளிவாகக் கூறி, தன்னலமற்ற தியாகத்திற்குத் தயாராய் இருப்பவர்களைப் பார்த்தே காங்கிரசில் அங்கத்தினர்களாய்ச் சேர்க்க வேண்டும். இவ்வேலையில் எல்லா தாலுகா, ஜில்லா, நகர, கிராம காங்கிரஸ் கமிட்டிகள் வேலை செய்யுமாறு மாகாணக் கமிட்டி தூண்ட வேண்டும்.

—:o:—

(சென்ற வாரத் தொடர்ச்சி)

II

# சோஷியலிஸ்டு பொருள் உற்பத்தி முறை

சோவியத் சர்க்காரின் தேவைகள், அநேகம் இருக்கலாம். அவைகள் எல்லாம் நாட்டின் செல்வத்தை விருத்தி செய்வதற்கானதாயும் இருக்கமுடியாது. உதாரணமாக, சோவியத் ருஷியாவைக் கபளீகரம் செய்ய விரும்பும் ஏகாதிபத்திய வெறி கொண்ட சர்க்கார்களின் படையெடுப்பு பயம் எப்பொழுதும் சோவியத் சர்க்காருக்கு இருக்கிறது. ஆகவே, இப்படிப்பட்ட ஆக்கிரமிப்பை எதிர்க்க சேனை பலத்தை அதிகரிப்பது, சோவியத் சர்க்காரின் முதற்கடமையாயிருக்கிறது.

மேலும், ருஷியமக்களின் நாகரீக வாழ்க்கையை நாளுக்கு நாள் விருத்தி செய்வதும், சர்க்காரின் கடமையாகும். ஆகவே பள்ளிக்கூடங்களை நிறுவுவதும், அவைகளுக்கு வேண்டிய உபாத்தியாயர்கள், புஸ்தகங்கள், முதலியவைகளைத் தேடுவதும் அத்தியாவசியமாயிருக்கிறது. மூன்றாவதாக, சுகாதார இலாகாவிற்கு வேண்டிய பொருள்கள் கண்டுபிடிக்கப்பட வேண்டும். கடைசியாக நாட்டில் உற்பத்தியாகும் மூலப் பொருள்களில், எந்த அளவு, உற்பத்தி சாதனங்களை (மெஷின்கள், தொழிற்சாலைகள் முதலியவைகள்) அதிகரிக்க உபயோகிக்கவேண்டும், எந்த அளவு மக்களின் உபயோகத்திற்கான பொருள்களை உற்பத்தி செய்வதில் ஈடுபடுத்தவேண்டும் என்பதைக் குறித்து சோவியத் சர்க்காரின் அபிப்பிராயத்தையும் கவனிக்க வேண்டும்.

ஆகவே, மேற்கூறிய அநேக விஷயங்களில் அரசாங்கத்தின் யோசனைகளையும் கேட்ட பிறகு, "கோஸ்ப்ளான்," நாட்டின் வருஷாந்திர திட்டத்தைத் திருத்தியமைக்கிறது. உடனே, இந்த ஸ்தாபனமும் தனக்குப் போடப்பட்டுள்ள திட்டத்தை நன்கு பரிசீலனை செய்வது, இந்த ஸ்தாபனங்களின் நிர்வாகக் கமிட்டியல்ல. ஆனால், திட்டம், ஒவ்வொரு ஸ்தாபனத்திலும் ஈடுபட்டுள்ள எல்லா மக்களும் சேர்ந்து மகாநாடுகளை நடத்துகின்றனர். இந்த மகாநாடுகளில், திட்டம், நன்கு பரிசீலனை செய்யப்பட்டு, திருத்தங்களும் செய்யப்படுகின்றன. இவ்வாறு திருத்தப்பட்ட இந்தச் சறிய சிறிய திட்டங்கள் மறுபடியும் மத்தியஸ்தாபனத்தைப் போய்ச் சேருகின்றன. மத்தியஸ்தாபனம், இந்தத் திட்டங்களையெல்லாம் ஒருங்கே சேர்த்து ஒன்றிற்கொன்று முரணில்லாமல் திட்டத்தை இரண்டாம்முறை தயாரிக்கின்றது.

இவ்வாறு தயாரிக்கப்பட்ட திட்டம் சோவியத் ருஷியாவின் நிர்வாகக் கமிட்டி (மந்திரி சபை) முன்பும், சட்டசபை முன்பும் சமர்ப்பிக்கப்பட்டு, அந்த சபைகளின் அங்கீகாரம் பெற்றவுடன் நாட்டின் சட்டமாய் விடுகிறது.

தனி மனிதனின் லாபத்தையே உத்தேசித்து, போட்டி பலத்த மார்க்கட்டிற்காக, உற்பத்தி செய்யப்படும் முறை கைவிடப் பட்டவுடன் ஒவ்வொரு உற்பத்தி ஸ்தாபனமும் எந்த அளவிற்கு எந்தப் பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டும் என்பதைக் குறிப்பாகவும், திட்டமாகவும் நிர்ணயிக்க வேண்டியது அவசியம். அது, மேற்கூறியவாறு, ஒவ்வொரு ஸ்தாபனத்தின் அபிப்பிராயத்தையும் கேட்டு, அவைகள் தங்களுடைய பழய அநுபவத்திலிருந்து தயாரிக்கும் திட்டங்களை ஆதாரமாகக் கொண்டு, நிர்ணயிக்கப்படுகின்றது ருஷியாவில்.

மேற்கூறிய மூன்றுவகை உற்பத்தி ஸ்தாபனங்களின் விவசாயக் கூட்டுறவு ஸ்தாபனங்களின் மீது மத்திய ஸ்தாபனத்தினால் நேர் முறையான ஆதிக்கம் செலுத்த முடியாது என்பது தெரிய வரும். "கோஸ்ப்ளான்" தயாரித்த திட்டப்படி, குறிப்பிட்ட பொருள்களை உற்பத்தி செய்யவோ, அல்லது குறிப்பிட்ட அளவிற்குப் பொருள்களை உற்பத்தி செய்யவோ அவர்கள் மறுக்கலாம். ஆனால். சர்க்கார் மறைமுகமாக இந்த ஸ்தாபனங்களின் மீது தங்கள் ஆதிக்கத்தை, திட்டம் நிறைவேறும் அளவிற்கு, செலுத்தக்கூடிய நிலைமையில் தான் இருக்கிறது. இந்த ஸ்தாபனங்களின்மீது விதிக்கப்படும் வரிகளை மாற்றலாம். சர்க்காருக்குச் சொந்தமாயுள்ள ஆலைகளில் தயாரிக்கப்படும் ஆயுதங்களின் விலையை மாற்றி, அதன் மூலம் இந்த ஸ்தாபனங்கள்மீது போதிய அளவிற்கு ஆதிக்கத்தைச் செலுத்தி, திட்டத்தை நிறைவேற்றி வைக்கலாம்.

பி. ராமமூர்த்[illegible]

மேலும், இம்மாதிரியான கூட்டுறவு உற்பத்தி ஸ்தாபனங்கள் இருப்பதிலிருந்து, இந்த ஸ்தாபனங்களுக்குள் பண்டமாற்று நடைபெற்று வருகிறது என்பதை நன்கு உணரவேண்டும். பண்டங்கள் ஒவ்வொரு ஸ்தாபனத்திற்கும் மத்திய ஸ்தாபனத்தின் மூலம் வினியோகிக்கப்படுவதில்லை என்பதையும் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில், அரசாங்கத்திற்கே எல்லா உற்பத்தி ஸ்தாபனங்களும் சொந்தமானதாயும், அவைகளில் வேலை செய்யும் மக்கள் ஒவ்வொருவரும், "கூலி"யைப் பெற்றுக் கொண்டுள்ளவர்களாயுமுள்ள ஒரு சோஷியலிஸ்டு சமூகத்தையும் நாம் கற்பனை செய்துகொள்ள முடியும். அப்படிப்பட்ட சமூகத்தில், உற்பத்தி செய்யப்படும் பொருள்களெல்லாம் சர்க்காரைச் சேரும். பிறகு, சர்க்கார் மக்களுக்கு, அவைகளை, அவர்களுடைய கூலிக்குப் பதிலாக, விற்கும். அந்த சமூகத்தில் கூலிக்காகக் கொடுக்கப்படும் நாணயம், பொருள்களை ஒரு குறிப்பிட்ட அளவிற்கு வாங்கிக் கொள்ளக் கூடிய சக்தியுடைய சாதாரண சீட்டாக இருக்கும். ஆகவே, அப்படிப் பட்ட சமூகத்தில், 'பண்டமாற்று' என்பது இருக்க முடியாது.

ஆனால் இப்படிப்பட்ட ஒரு சோஷியலிஸ்டு சமூகம், இன்று சோவியத் ருஷியாவில் இல்லை என்பது இங்கு குறிப்பிடவேண்டியது. நாட்டிலுள்ள உற்பத்தி ஸ்தாபனங்களில் ஒரு பெரும் பகுதி, கூட்டுறவு ஸ்தாபனங்களின் அங்கத்தினர்களுக்கே சொந்தமாயுள்ளன. ஆகவே, நாட்டில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களில் ஒருபெரும் பகுதி, மார்க்கட்டிற்கு வந்து மக்களுக்கிடையேயும், பண்டமாற்று நடைபெறுகிறது என்பதை நன்கு அறிதல் வேண்டும். இப்படிப்பட்ட பண்டமாற்று, அல்லது வியாபாரம் நடப்பது கூட்டுறவு ஸ்தாபனங்களுக்கிடையே மாத்திரமல்ல. அரசாங்க ஸ்தாபனங்களும், தங்களுக்குள்ளும் மற்ற கூட்டுறவு ஸ்தாபனங்களுக்குள்ளும், இந்த வியாபாரத்தை நடத்துகின்றன. மேலும், இருவகை ஸ்தாபனங்களும், சில்லரையில் நேராக, மக்களுக்கு, அவர்களுடைய உபயோகத்திற்கு வேண்டிய பொருள்களை விற்கின்றன. ஆகவே, சர்க்காரின் மூலமல்லாமல், மற்றவழிகளில் விற்றுமுதல் நடந்துதான் வருகிறது, இன்று சோவியத் ருஷியாவில் என்பதையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுதல் அவசியம்.

முதலாளித்துவ நாடுகளில் நடக்கும் வியாபாரத்திற்கும், சோவியத் நாட்டில் நடந்து வரும் வியாபாரத்திற்கு முள்ள வித்யாசங்கள் மற்றொரு பகுதியில் விரிவாக எடுத்துரைக்கப்படும். இங்கு, இரண்டு விஷயங்களை மாத்திரம், சோவியத் வியாபாரத்தைக் குறித்துக் கூறவேண்டியது அவசியமாகும். முதலாவதாக, எந்தத் தனிமனிதனுடைய லாபத்திற்காகவோ, அல்லது தனி மனிதர்களின் எந்தக் கோஷ்டியின் சொந்த லாபத்திற்காகவோ, கூலிகொடுத்து, தொழிலாளிகளிடம் வேலை வாங்கப்படுவதில்லை. இரண்டாவதாக, பொருள்களை விலைக்கு வாங்கி, லாபத்திற்காக, வாங்கின விலையைக் காட்டிலும் அதிகமான விலைக்குப்பொருள்கள் விற்கப்படுவதில்லை.

ஒரு மத்திய ஸ்தாபனத்தின் மூலமாய் நடத்தாமல், வினியோக முறையை இவ்வாறு விரிவாக்குவதனால் அநேக லாபங்கள் உண்டு. ஆனால், இம்முறையினால் பொருள் உற்பத்தியை நிர்ணயிக்கும் மத்திய ஸ்தாபனம் அநேக சிக்கலான பிரச்சினைகளைத் தீர்க்கவேண்டியிருக்கிறது. இம்மாதிரியான விரிவான வினியோக முறையைத் திட்டத்திற்கு ஏற்றவாறு அமைத்துக் கொள்ளுவது மிகவும் கஷ்டமாய் விடுகிறது.

ஆயினும், சோவியத் ருஷியாவின் அநுபவத்திலிருந்து, எவ்வளவு கஷ்டங்களிலிருந்த போதிலும், இம்முறைதான், சோவியத் ருஷியாவிற்கு ஏற்றதாகத் தோன்றுகிறது.

உலகத்தில் முதல் முதலாகத் தோன்றிய சோஷியலிஸ்டு சமுகத்தில் நிலவிவரும் உற்பத்தி ஸ்தாபனங்களையும், அவைகள் நடைமுறையில் எந்த முறையைக் கையாளுகின்றன என்பதையும் கண்டுகொண்டோம். இதனால் ஏற்பட்டுள்ள பலன்கள் என்ன என்பதுதான் அடுத்த கேள்வி? இதைப்பற்றி அநேக அபிப்பிராயங்கள் நிலவி வருகின்றன. சோஷியலிஸ்டு சமுகம் என்பது ஒரு பகற்கனவு! அநுபவ சாத்தியமானதல்ல; முதலாளித்துவம் இயற்கையாகத் தோன்றியுள்ள ஒரு சமூக அமைப்பு; ஆகவே அந்தச் சமூக அமைப்பை மாற்ற, சோஷியலிஸ்டு சமூக அமைப்பை நிலைநிறுத்துவது என்பது வெறும் மனக்கோட்டை, என்றெல்லாம் கூறுகின்றன முதலாளித்துவ பொருளாதார நிபுணர்களும், அரசியல் வாதிகளும். ஆனால், நமது கண் முன்னேயே ஒரு சோஷியலிஸ்டு சமூகம் இருந்து வருகிறது; அது நாளுக்கு நாள் வளர்ந்தும் வருகிறது.

(தொடரும்)

# திருவிதாங்கூர் 'வெல்லிங்டன்'

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

நடத்தப்படும் 'பொறுப்பாட்சி'க் கிளர்ச்சியையும் அடியோடு நசுக்குவதற்கு ஸர். ஸி. பி. பல முறைகளைக் கையாண்டு வருகிறார். 'பொறுப்பாட்சி'க் கொள்கையை வற்புறுத்தி எழுதிய அநேக பத்திரிகைகளை அவர் ஒழித்துவிட்டார். 'ராஜத்துவேஷ' வழக்குத் தொடர்ந்து, சமஸ்தான காங்கிரஸின் முக்கிய அங்கத்தினராயிருந்த ஸ்ரீ. A. நாராயண பிள்ளையை சிறைக் கோட்டத்திற்கு அனுப்பிவிட்டார். தன் கக்ஷியை வாதிப்பதற்கு ஸ்ரீ. நாராயண பிள்ளைக்கு சர்க்கார் சந்தர்ப்பம்கூட அளிக்கவில்லை. ஸ்ரீ. நாராயண பிள்ளைக்காக எதிர் வழக்காட வந்த ஸ்ரீ. நரிமனை கோர்ட்டில் வழக்காட இடங்கொடுக்க மறுத்ததும் அல்லாமல், அவர் ஏரோப்ளேனிலிருந்து இறங்கும்போது அவரை வர

பல ஸ்திரீயும் ஷி 'காலிகளால்' பட்டப் பகலில், நடுத்தெருவில் தாக்கப்பட்டதை நாம் பத்திரிகை வாயிலாக படித்தோம்.

'பொறுப்பாட்சி'க் கிளர்ச்சியில் ஈடுபட்டிருக்கும் தலைவர்களுடைய உயிருக்கும், பொருளுக்கும் இப்பொழுது ஸர். ஸி. பி. யின் ஆதிக்கத்தில் பாதுகாப்பே கிடையாது. திருவாங்கூர் சர்க்காரின் அடக்குமுறையை சில தினங்களுக்கு முன்னால் கண்டித்துக் கிளர்ச்சி செய்த மாணவர்கள் கூட்டத்தையும், ஊர்வலத்தையும் தடியடிப் பிரயோகம் செய்து போலீஸார் கலைத்ததை யாவரும் அறிவார்கள். ஊர்வலத்தில் கலந்து கொள்ளாத பொது ஜனங்களும் இரக்கமற்ற முறையில் போலீஸாரால் தாக்கப்பட்டதையும் எவரும் கண்டிக்காமலிருக்க முடியாது. இவ்வளவு கடுமையான அடக்குமுறைகளை ஸர். ஸி. பி. அனுஷ்டித்தும், சமஸ்தான ஜனங்களிடை பரவி வரும் அரசியல் விழிப்பை அவரால் ஒடுக்கிவிட முடியவில்லை.

மேலும், திருவாங்கூர் சமஸ்தான காங்கிரசிற்கு எதிராக பல அரசியல் கட்சிகளின் 'உதயத்திற்கு' ஸர். ஸி. பியே காரணமாயிருக்கிறார். "எங்கள் லட்சியமும் 'பொறுப்பாட்சி' வேண்டுமென்பதுதான்; ஆனாலும், எங்கள் கொள்கை அஹிம்சை. சமஸ்தான காங்கிரஸ் போல நாங்கள் பலாத்கார வழிகளில் இறங்கமாட்டோம்," என்ற அறிக்கைகளுடன் 'சமஸ்தான தேசிய, காங்கிரஸ்,' 'சமஸ்தான பிரஜா மண்டல்' போன்ற ஸ்தாபனங்கள் 'உள்ளூர' சமஸ்தான காங்கிரசை தொலைப்பதற்காகவே தோன்றியிருக்கின்றன. சமஸ்தான காங்கிரஸின் லட்சியம் 'மன்னருக்கெதிராக பலாத்கார புரட்சியைக் கிளப்புவது' என்று ஜனங்களிடம் பிரசாரம் செய்தால், அந்த ஸ்தாபனத்தின் செல்வாக்கு குறையும் என்று ஸர். ஸி. பி. மனப்பால் குடிக்கிறார் போலும்!

திருவிதாங்கூர் சமஸ்தான காங்கிரஸ் உன்னதமான லட்சியத்துடன் பாடுபடும். உண்மையான தேச பக்தர்களும், தலைவர்களும் நிறைந்த தேசீய ஸ்தாபனம். மகாத்மாஜியின் அன்பிற்கு பாத்திரமானவரும், தமிழ்நாடு நன்றாக அறிந்தவருமான ஸ்ரீ. ஜி. ராமச்சந்திரன் போன்றவர்கள் திருவாங்கூர் சமஸ்தான காங்கிரஸ் கொடியின்கீழ் பொறுப்பாட்சிப் போராட்டத்தில் ஈடுபட்டிருப்பதே "சமஸ்தான காங்கிரஸ் ஒரு வகுப்புவாத ஸ்தாபனம், அது பலாத்காரமான வழிகளில் ஈடுபட்டிருக்கிறது என்று கூறுபவர்களின் கூற்று கலப்பற்ற பொய்யே யொழிய வேறு ஒன்றுமில்லை என்று எல்லோருக்கும் தெளிவாக்கிவிட்டது. முடிவில், திருவாங்கூர் பிரஜைகளின் போராட்டம் நியாயமானது. திவானின் கோரமான அடக்குமுறைகளுக்கு பின்வாங்காது, போராடி வரும் பிரஜைகளுக்கு நமது அனுதாபமும், உதவியும் அளித்தும் சமஸ்தானத்தில் நடக்கும் அடக்குமுறை தர்பாரைக் கண்டித்தும், தமிழ்நாட்டு பொது ஜனங்கள் 'சமஸ்தான பிரஜைகளின் கோரிக்கை நியாயமானது' என்று ஒப்புக்கொள்ளுகிறார்கள் என்ற செய்தியை, 'நாம் சமஸ்தான காங்கிரஸுக்கு தெரிவிப்போம். நம்முடைய அனுதாபம், திருவாங்கூர் பிரஜைகளுக்கு ஒரு புதிய சந்தோஷத்தையும், பலத்தையும் கொடுக்கும். இந்தப் புதிய சக்தியுடன் அவர்கள் திருவாங்கூரில் இன்று நடக்கும் யதேச்சாதிகார ஆட்சியை கவிழ்க்க பெரிய 'பொதுஜன' போராட்டத்தை ஆரம்பித்து வெற்றியும் பெறுவார்கள். 'அடிமைத்தனம்,' 'எகாதிபத்ய வெறி' இவைகளை எதிர்க்கும் ஒவ்வொரு காங்கிரஸ் கமிட்டியும், காங்கிரஸ் வாதியும், திருவாங்கூரில் 'அரசனுக்குமரசனை,' மற்றுமொரு 'வெல்லிங்டனை' ஆதிக்கம் செலுத்தும் ஸர். ஸி. பியை எதிர்த்துப் 'பொறுப்பாட்சி'க்காகப் போராடும் திருவாங்கூர் சமஸ்தான காங்கிரஸையும், பொதுஜனங்களையும் பூரணமாக ஆதரிக்கக் கடமை பட்டிருக்கிறார்கள்.

'திருவாங்கூர் சமஸ்தானக் காங்கிரசுக்கு ஜே!'

'சமஸ்தானத்தில் நடக்கும் அடக்குமுறை ஆட்சி ஒழிக.'

'பொறுப்பாட்சி கிளர்ச்சி பலம் பெறுக'

---



---

வேற்பதற்காகச் சென்றிருந்த கூட்டத்தைப் போலீஸார் அனுமதிக்கவில்லை. ஆனால் சர்க்காரால் தயார் செய்யப்பட்டு "நரினே திரும்பிப்போ என்ற கறுப்புக்கொடிகளுடன்" ஆர்ப்பட்டம் செய்யும் கூட்டத்தை மட்டும் நரிமன் பக்கங்களில் செல்ல அனுப்பியது எதைக் காட்டுகிறது? சமஸ்தான காங்கிரஸ் ஆதரவில் திருவாங்கூரில் பொதுக் கூட்டங்களும், ஊர்வலங்களும் நடைபெறுவதையும், திவான் ஸர். ஸி. தடையுத்தரவு மூலம் தடுத்துவிட்டார். பொதுக் கூட்டம் கூட்டி பேசும் காங்கிரஸ் தலைவர்களை 'காலிகளை'க்கொண்டு தாக்குவது என்ற 'நவீன' முறையையும் சர்க்கார் ஆதரிக்கிறார்கள் என்பது நிதர்சனம். ஸ்ரீமான்கள் பட்டம் தாணுப் பிள்ளை, நீலகண்டப் பிள்ளை போன்ற செல்வாக்குள்ள தலைவர்களும், சமஸ்தான காங்கிரஸில் அங்கம் வகிக்கும் பிர



---

## மதிப்புரை

தோழர் வி. ஜி. சுவாமி அவர்களை ஆசிரியராகக் கொண்டு, வெளிவரும் "வீர சக்தி" என்ற மாத வெளியீட்டின் 7-வது இதழ் வரப்பெற்றோம்.

பத்திரிகையில் பிரசுரமாயிருக்கும் கட்டுரைகள், கதைகளிலிருந்து, இது முற்போக்குக் கொள்கையைப் பிரசாரம் செய்யவும், தொழிலாளர்கள் உரிமையைப் பாதுகாக்கவும் பாடுபடும் என்றே நினைக்கிறோம்.

| | | | |
|---|---|---|---|
| வருட சந்தா | ரூ. 1 | 0 | 0 |
| தனிப்பிரதி | 0 | 1 | 0 |

வேண்டுவோர் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்.

மானேஜர்
"வீர சக்தி"
1, வீரச்செட்டி தெரு,
P. B. சென்னை

# வெளிநாட்டு - உள்நாட்டுச் செய்திகள்

### கலகக்காரர்கள் தோல்வி

ஸ்பெயின் ஜனநாயகம் சென்ற வாரத்தில் கலகக்காரர்களைத் திருப்பி, துரத்தியடிக்க வாரம்பித்து விட்டது. இருபுறங்களில் ஜனநாயகப்படைகள் வெற்றிபெற்று, எங்கும் பொது ஜனங்களால் வரவேற்கப்பட்டனர். பல ஆகாய விமானங்கள் அப் படைகளின் வெற்றிப் போக்கைத் தடுப்பதற்குக் கலகக்காரர்களால் அனுப்பப்பட்டிருக்கின்றன.

### சேம்பர்லேன் வருந்துகிறார்

கலகக்காரர்கள் அதிர்ஷ்டம் இவ்வாறாக, அவர்களுக்கு உதவி புரிந்து வரும் முஸோலினி, பிரிட்டிஷ் மந்திரி சேம்பர்லெனை மயக்கிவிட்டார். "ஆங்கிலோ-இத்தாலிய ஒப்பந்தம் அமுலுக்கு வருவதற்கு ஸ்பெயின் நிலைமை ஒரு நிரந்தரப் பேராபத்தாய் விட்டதாம். இத்தாலி பிரிட்டனுக்குக் கொடுத்த உறுதி மொழிப்படி எல்லாம் செய்து விட்டது" என்றார். பொதுஜன ஆதரவற்ற கலகக்காரர்கள் வெற்றியடைவது முடியாது. முஸோலினி, ஹிட்லர், செம்பர்லெயின் விரும்பும் நிலை அதுவே.

### செக்கோஸ்லாவாகியாவில் பிரிட்டிஷ் மத்யஸ்தம்

பிரிட்டிஷ் மாஜி மந்திரி லார்ட் ரன்சிமன், செக்கோஸ்லாவாகியாவில் ஸுடெட்டன் ஜெர்மானியர்கள் நிலையைப் பற்றி சமாதானம் செய்ய அனுப்பப்படுவார். அவரது சமாதானத்திற்கு செக் கவர்ன்மெண்டார் ஒப்புக் கொண்டுவிட்டனர்.

### பாரிஸில் ஜவஹர்

ஜவஹர் பாரிஸில் ஸோவியத் பிரதிநிதியைக் கண்டு பேசினார். ஸ்மிலன் சீனாவிற்கு ஆதரவளிப்பதற்கு பிரெஞ்சு தொழிற் சங்க ஸி. ஜி. டி. கூட்டிய கூட்டத்தில் "ஏகாதிபத்தியம் ஒழியும் வரையில், போர்ப்பேயை ஓட்ட முடியாது" என்று கூறினார்.

### பாலஸ்தீனக் கிராமங்களில் பிரிட்டிஷ் படைகள்

பாலஸ்தீனத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கௌரவத்தை நிலை நிறுத்த இன்னும் 300 பிரிட்டிஷ் போலீஸ் சேர்க்கப்படுகின்றனரென்று பிரிட்டிஷ் மந்திரி மால்கெம்பாக்டானெல்ட் ஒப்புக் கொண்டார். மேலும் கிராமப் பிரதேசங்களில் நிரந்தரமாக பிரிட்டிஷ் படைகளையும், போலீஸையும் ஏற்படுத்தி விடுவார்களாம். போதாதெனில் இன்னும் படைகள் திரட்டியனுப்பப்படுமாம்.

### பர்மாவில் இந்தியர்களுக்குப் பாதுகாப்புண்டா ?

ரங்கூனில் இந்தியர்கள் தாக்கப்பட்டும், இந்தியர்களுக்குச் சொந்தமான கடைகள் சூறையாடப்பட்டும். பத்திரிகைகள் நாசமாக்கப்பட்டும் வருகிறது. இக்கிளர்ச்சி 'பர்மா பர்மியர்களுக்கே' என்ற அஸ்திவாரத்தின்மீது நடைபெற்று வருகிறது.

இத்தகராறால் 42 பேர் உயிர் இழந்தனர் 282க்கு மேல் காயமடைந்திருக்கின்றனர் பர்மாவிலிருக்கும் இந்தியர்கள் இந்த ஆபத்துகளிலிருந்து பாதுகாக்கப்படுவார்களா ?

### சௌரிசாரா கைதிகள் இருவர் விடுதலையானார்கள்

ஐக்கிய மாகாணக் காங்கிரஸ் மந்திரி சபை சௌரிசாரா வழக்கில் சம்பந்தப்பட்ட கைதிகளில் 2 பேரை அந்தமானிலும், 6 பேரை இங்குள்ள சிறையிலும் வைத்திருக்கின்றனர். அதில் இருவரை விடுதலை செய்துவிட்டனர். அந்தமானிலிருப்பவர்களை திரும்ப அழைத்துவரப் போகின்றனர். விரைவில் அந்த ஆறு பேர்களையும் விடுதலை செய்துவிடுவார்கள் என்று தெரிகிறது.

### கிருஷிகர்-சர்க்கார் யுத்தம்

பஞ்சாபில் கிருஷிகர்கள் யுத்த கவன்ஸில் என்று ஒன்று ஏற்படுத்திக்கொண்டு, புதிய நிலத் தீர்வை முறையை எதிர்த்தும், கால்வாய்களின் அகலத்தைக் குறுக்குவதை எதிர்த்தும் போர் செய்து வருகின்றனர். ஜதா ஜதாவாக கைதியாகின்றனர். கைது செய்யப்பட்டவர்களை அமிர்தசரஸ் ஜில்லாவின் எல்லையில் கொண்டு சர்க்கார் விடுதலை செய்கின்றனர்.

27ந் தேதி காலையில் ஜாலியன் வாலாபாக்கை சோதனை போட்டு பல தலைவர்களைக் கைது செய்திருக்கின்றனர். ஆகஸ்ட் 9ந்தேதி லாகூரில் டிப்டி கமிஷ்னர் கலக்டர் இவர்கள் முன் ஆயிரக்கணக்கான கிருஷிகர்கள் ஊர்வலமாகச் சென்று தங்கள் கோரிக்கைகளை சமர்ப்பிக்கப் போகின்றனர்.

144-வது தடையுத்தரவுக்கும் கொடிய அடக்கு முறைகளுக்கு மிடையே பஞ்சாப் கிருஷிகர்கள் விடாது போரிடுவது மிகவும் போற்றத்தக்கது.

# சைதாப்பேட்டை நெசவுத் தொழிலாளர் பரிதாப நிலை

காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்டதின் பயனாக சென்னை மாகாணத்தைப் பொறுத்த வரையில், எல்லா தொழில்களிலும், எல்லா வியாபாரங்களிலும், பலதரப்பட்ட உத்தியோகங்களிலும் மாற்றம் ஏற்பட்டிருப்பதைக் காண்கிறோம். அந்தந்தத் தொழிலுக் கேற்ற பாதுகாப்புகளையும் உரிமைகளையும் பெற்று வரும் இக்காலத்தில், குறிப்பாக சைதாப்பேட்டையில் 8000 கைத்தொழில் நெசவுத் தொழிலாளர்களுடைய நிலை நாளுக்கு நாள் க்ஷீணமடைந்து பரிதபிக்கக்கூடிய நிலையில் வந்துவிட்டது. இதற்குக் காரணம் சென்ற 10 வருஷத்திற்கு முன் 46 இஞ்சு அகலம் 18 கெஜம் நீளத்திற்கு சகஜமாய் நெய்பவர்களுக்கு 7 ரூபாய் கூலி கொடுத்து வந்தார்கள். தரகு வியாபாரிகளுக்கு 1 ரூபாய் கமிஷன், துறைமுக வியாபாரிகள் அவர்கள் இஷ்டம்போல் கொள்ளை லாபம் சம்பாதித்து வந்தார்கள். இன்றைய நிலைமை 7 ரூபாய் கொடுத்த ரகத்திற்கு 3 ரூபாய் கொடுக்கிறார்கள். பழய படி தரகு வியாபாரிகளுக்கு 1 ரூபாய் கமிஷன் இருந்துகொண்டு வருகிறது. துறைமுக வியாபாரிகளுக்கு முந்தி பீஸில் மாத்திரம் இஷ்டம்போல் லாபம் சம்பாதித்தார்கள். இப்பொழுது நூல் பெட்டி 1க்கு 2 அல்லது 3 ரூபாய் லாபம் வைத்துக் கொள்ளுகிறார்கள். 18 கெஜம் கொண்ட ஒரு பீஸை ஒரு தொழிலாளி 1 வாரத்திற்குக் கஷ்டப்பட்டு நெய்ய வேண்டும். அப்படி கஷ்டப்பட்டு நெய்து முதலாளியிடம் ஒப்பிக்கும்போது, அதில் இருக்கக் கூடிய குறைகளை கவனிப்பதும் இல்லை. குறை கண்டு பிடிக்கவும் முடிவதில்லை. தங்களுடைய சுயநலத்தைக் கருதி ஏழைகள் ரத்தத்தை உறிஞ்சுவதற்கென்றே குந்திக் கொண்டிருக்கும் முதலாளிகள், இரக்கமின்றி குற்றம்கண்டு பிடிக்கக்குற்றமில்லாதவெவ்வொரு பீஸ்களுக்கும் 18 கெஜம் கொண்ட பீஸ்களுக்கு பஜார் தள்ளு 2-8-0 டபள் தள்ளு 1 ரூபாய் சாதாரண தள்ளு 8 அணா இப்படி பல வகையில் ஏழைகளை ஏமாற்றி, இவர்கள் இந்த பீஸ்களையே வெளிநாட்டுக்கு அனுப்பும்போது நல்ல பீஸ்களாகவே அனுப்பி ஏழைகளை ஏமாற்றி லாபம் சம்பாதிக்கிறார்கள். இந்த நிலைமையில் ஏழைத் தொழிலாளிகள் 8 நாளைக்கு கஷ்டப்பட்டு 2-8-0 சம்பாதிப்பதில் மேற்கண்ட தள்ளுதரம் இவைகள் வந்தால் ஒருவாரம் கஷ்டப்பட்டு தொழிலாளிக்கு கூலியே இல்லாமலும் போய் விடுகிறது. கூலிக்காரர்கள் எல்லோரும் சேர்ந்து முதலாளிகளை விசாரித்தால் அவர்கள் சொல்லும் பதில் என்னவென்றால், இப்போது வியாபாரம் நடக்கவில்லை என்றும், சரக்கு அபாரமாய் குவிந்துவிட்டதென்றும், ஆனதால் இதைப்போல் செய்கிறோமென்றும் சொல்லுகிறார்கள். இவர்களுக்கு வியாபாரம் நடக்கவில்லை என்றால் குவிந்து கிடக்கும் சரக்கை ஏன் ஏற்றுமதி செய்கிறார்கள் ? சரக்கை வீட்டில் போட்டுவிட்டு கடையைச் சாத்திவிடாமல், ஓய்வு ஒழிவில்லாமல் கடைகளில் ஏன் வியாபாரத்தை நடத்த முற்படுகிறார்களோ தெரியவில்லை ? தன் லாபமே பெரிதென எண்ணி சரக்குகளை ஏராளமாய் வாங்கிக் கொண்டு ஏழை கைத்தொழில் நெசவுத் தொழிலாளரை இம்சித்துக் கொண்டு இருக்கிறார்கள். ஏழைகள் அழுத கண்ணீர் கூரிய வாளை ஒக்கும். வெகு சீக்கிரத்தில் ஏழைத் தறிகாரர்கள் ஒன்றுகூடி ஸ்ட்ரைக் செய்வார்கள் என்று தெரிகிறது. காங்கிரஸ் மந்திரி சபை உடனே கவனித்து முதலாளிகளையும் ஏழைத் தொழிலாளர்களையும் வரவழைத்து விசாரணை செய்து தக்கது செய்யவேண்டும்.

—K. M. முனிசாமி.

---

### பீளமேடு ராதாகிருஷ்ணா மில் ஸ்ட்ரைக்

ராதா கிருஷ்ணா மில்லில் வேலை செய்துகொண்டிருந்த பல தொழிலாளர்களை அகாரணமாகத் தள்ளியதினால்தான் இந்த வேலை நிறுத்தம் ஏற்பட்டது. தொழிற் சங்கத்தார் பல முயற்சிகள் செய்தும் முதலாளிகள் விலக்கிய தோழர்களை வேலைக்கு அமர்த்திக்கொள்ள மறுத்துவிட்டார்கள். ஸ்ட்ரைக் கடந்த ஒரு வாரமாக நடந்து கொண்டிருக்கிறது. பெண், ஆண் தொழிலாளர்கள் மிகவும் கட்டுப்பாடுடன் இருந்து வருகிறார்கள்.

ஸ்ட்ரைக்கின் வெற்றிக்குப் பாப்பநாயக்கன் பாளையம் தொழிலாளத் தோழர்கள் இராப்பகலென்று பாராது உழைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

தோழர் என். ஜி. இராமசாமி எம்.எல்.ஏ., என். சி. சேகர், பி. ராமமூர்த்தி, ஆர். கிஸன், கே. ரமணி, வி. ரெங்கநாதன், ஆர். துரைசாமி இன்னும்பல தோழர்களும் தொழிலாளர்களை அமைதியுடனிருக்கும்படி பிரசாரம் செய்துகொண்டு வருகிறார்கள்.

# அ. இ. கா. நிர்வாகக் கமிட்டி நடவடிக்கைகள்

...காவில் நடைபெற்ற அ. ... கமிட்டியின் நிர்வாகக் ...க் கூட்டம் தேசத்தில் ... கமிட்டிக் கூட்டத்திற்கு பின் ஏற்பட்ட ராஜீய நிலைமைகளைப் பரிசீலனை செய்தது. பின் மத்ய மாகாணத்தில் ஏற்பட்ட மந்திரி சபை நெருக்கடியைப் பற்றி முடிவு செய்வதில்தான் மிகுந்த சிரமப்பட்டு ஒரு முடிவிற்கு வந்தது. கூட்டத்தில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டிருக்கிறது. அவைகளில் முக்யமானவை கீழ்வருமாறு:—

1. பார்லிமெண்டரி சப் கமிட்டியினர் கூறிய விஷயங்களைக்கேட்டும் பாச்மாரஹி என்ற விடத்தில் கமிட்டி அங்கத்தினர்கள் முன்னிலையிலும், மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகள் மூன்றின் தலைவர்கள் முன்னிலையிலும் மந்திரிகளுக்கிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தை முன்னிட்டும் பிறகு டாக்டர் கரே பல தடவைகள் கண்டு பேசியதை அநுசரித்தும் பார்க்கையில் கடைசியில் டாக்டர் கரே ராஜிநாமா செய்துவிட்டுத் தனது சகாக்களையும் ராஜிநாமா செய்யும்படி வற்புறுத்தியது நிதானத் தவறுன காரியமென்றும், இம்மத்ய மாகாணத்தில் அதனுல் காங்கிரஸ் மதிப்புக்குப் பெரும் பங்கம் நேருவதாகவிருக்கிற தென்றும் காரியக் கமிட்டி மிக்க தயக்கத்துடன் முடிவுகூற வேண்டியிருக்கிறது. அவசரப்பட்டு ஒன்றும் செய்ய வேண்டாமெனப் பலமுறை எச்சரிக்கை செய்திருந்தும் டாக்டர் கரே இவ்விதம் நடந்தது அவரது கட்டுக்கடங்காத் தன்மையைக் காட்டுகிறது. அதுவும் பெருந்தவருகும். இவர் ராஜிநாமா செய்ததால், காங்கிரஸ் பதவி வகிக்க ஆரம்பித்த பின் முதல் முதலாகக் கவர்னர் தனது விசேஷ அதிகாரத்தை உபயோகித்து, மந்திரிகள் சிலரை டிஸ்மிஸ் செய்யவும் நேர்ந்தது. மஹாகோசல மந்திரிகள் மூவரும் பார்லிமெண்டரி சப் கமிட்டி உத்தரவளிக்காதவரையில் தாங்கள் ராஜிநாமா செய்ய முடியாதெனக் கவர்னருக்கு சொல்லிவிட்டது காரியக் கமிட்டிக்குத் திருப்தியை அளிக்கிறது. புதிய மந்திரி சபையை அமைக்கும்படி கவர்னர் அழைத்ததற்கு இணங்கி மந்திரி சபையை அவர் அமைத்ததும் காங்கிரஸ் கட்டுப்பாட்டுக்கு விரோதமாகும். அது வழக்கத்துக்கும் மாறுன காரியமாகும். காரியக் கமிட்டிக் கூட்டமும் பார்லிபெண்டரி சப் கமிட்டிக் கூட்டமும் சமீபத்தில் நடக்கவிருப்பதை அறிந்திருந்தும் பார்லிமெண்டரி சப் கமிட்டியின் அநுமதியின்றிப் புதிய மந்திரி சபையை நியமித்து ராஜ விஸ்வாசப் பிரமாணமும் எடுத்துக் கொள்வது தவறு எனத் தெரிந்திருந்தும் இவ்விதம் செய்தது முற்றிலும் விரோதமாகும்.

இவ்விதக் காரியங்களால் டாக்டர் கரே காங்கிரஸ் ஸ்தாபனத்தில் பொறுப்பமைந்த பதவி வகிக்க யோக்கியதை அற்றவர் என்பதைக் காட்டிக்கொண்டார்.

காங்கிரஸ்காரர் என்ற ஹோதாவில் அவர் நிதான புத்தியுடனும், கட்டுப்பாட்டுக் கிணங்கியும் மேற்கொண்ட கடமைகளை நிறைவேற்றத் தகுதியுடையவர் என அவரது காரியங்களால் காட்டும் வரை மேற்கண்டவாறே அவரைக் கருத வேண்டும். மத்திய மாகாணக் கவர்னர் அசட்டுத்தனமாக அவசரப்பட்டு இரவு என்றும் பாராமல் நெருக்கடியை உண்டு பண்ணி அவரால் இயன்ற அளவு காங்கிரசின் மதிப்பைக் குறைக்க முயன்றுர் என்றே காரியக் கமிட்டி சற்றுத் தயக்கத்துடன் முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. அதோடு அவர் காரியக் கமிட்டியும் பார்லிமெண்டரி கமிட்டியும் ஆலோசித்து வருகையில்; இவ்வளவு அவசரமாக மூன்று மந்திரிகளின் ராஜிநாமாவை அங்கீகரித்துக்கொண்டு மற்ற மூவரை ராஜிநாமா செய்யும்படிக் கேட்டு அவர்கள் மறுத்ததும், அவர்களை டிஸ்மிஸ் செய்து, டாக்டர் கரேயை அழைத்துப் புதிய மந்திரி சபையை நியமிக்கும்படி செய்து அந்த சமயம் ஊரிலிருந்தவர்களை உடனே ராஜவிஸ்வாஸப் பிரமாணம் செய்யச் சொல்லியும் இருக்கக்கூடாது. காரியக் கமிட்டியின் முடிவை அவர் எதிர்பார்த்திருக்க வேண்டும்.

2. முஸ்லீம் லீக்குதான் இந்நாட்டு முஸல்மான்களின் பிரதிநிதி ஸ்தாபனம் என்பதைக் காரியக் கமிட்டி ஒப்புக்கொள்ள முடியாது. காரியக் கமிட்டியினர் தீர்க்கமாக ஆலோசித்த பிறகே இம்முடிவுக்கு வந்தனர். சீக்கிரத்தில் இந்தப் பதிலைக் காங்கிரஸ் தலைவர் ஜனப் ஜின்னுவுக்கு அனுப்புவார். வகுப்பு ஒற்றுமை சம்பந்தமாக ஒரு ஒப்பந்தம் ஏற்படுத்தும் விஷயத்தில் தேசிய முஸ்லீம்கள் எனச் சொல்லப்படும் எவரையும் சேர்க்கக் கூடாதென முஸ்லீம் லீக் கோரியதையும் காரியக்கமிட்டி அங்கீகரிக்கவில்லை. தகுந்த பிரதிநிதிகளைத் தெரிந்தெடுத்துக்கொள்ள காங்கிரஸ் காரியக்கமிட்டிக்கு உரிமை இருக்கவேண்டுமெனக் கமிட்டி அபிப்பிராயப்படுகிறது. கடைசியாக முஸ்லிம்லீக் இந்தப் பதிலைத் தீர்க்கமாகக் கவனித்து அதற்கேற்றவாறு நடந்து இருதரப்பாரும் ஆரம்பித்த பயனுள்ள வேலை இனிது முடிய வழி தேடுமென நம்புவதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

3 மாகாணப்பிரிவினை சம்பந்தமாக சென்னை சட்ட சபையும் பம்பாய் சட்டசபையும் பார்லிமெண்டரி சப் கமிட்டி அநுமதியுடன் நிறைவேற்றிய தீர்மானங்களை இக்கமிட்டி அங்கீகரிக்கிறது. காங்கிரசுக்கு அதிகாரம் வந்ததும் இவ்விஷயம் இந்தியா கவர்ன்மெண்டின் பிற்கால வேலைத்திட்டமாக கவனிக்கப்படுமென்று அப்பிரதேச வாதிகளுக்கு இக் கமிட்டி உறுதி கூறுகிறது அதோடு இச் சம்பந்தமாக மேற்கொண்டு கிளர்ச்சி செய்து நாட்டினரின் கவனத்தை முக்கிய விஷயங்களிலிருந்து திருப்பாமலிருக்கும்படியும் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறது.

4. மான்ஸா, ராமதுர்க்கம், ஜாம்கண்டி, மிராஜ் ஆகிய விடங்களிலுள்ள பிரஜைகள் தங்கள் ராஜீயப் பொருளாதார உரிமைகளுக்காக, தைரியமாக பலாத்காரமற்ற முறையில் போராடி வெற்றி பெற்றதற்காக அவர்களை இக்கமிட்டி பாராட்டுகிறது.

5. ஒரிஸ்ஸாவிலுள்ள நீலகிரி சமஸ்தானத்தில் கூட்டங்களுக்கும் ஊர்வலங்களுக்கும் தடை ஏற்படுத்தி சங்கங்களும் ஸ்தாபிக்கக்கூடாதென உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதைக் கண்டித்து, அங்குள்ளவர்கள் பலாத்காரமற்ற முறையில் போராடி வருவதால், அவர்களிடம் இக்கமிட்டி தனது அநுதாபத்தை தெரிவித்துக்கொள்கிறது.

6. தற்சமயம் சமஸ்தானக் காங்கிரஸ் கமிட்டிகள் ஆங்காங்கு அதனதன் எல்லையில் உள்ள மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் ஆதிக்கத்துக்கு உட்பட்டு நடந்து வரவேண்டுமென இக் கமிட்டி தீர்மானிக்கிறது.

7. சிக்கர் வாசிகள் தீரத்துடன் ஆயுத பலத்தைக் கைவிட்டு அஹிம்ஸா முறையை அனுஷ்டித்தது பற்றி அவர்களைக் கமிட்டி பாராட்டுகிறது. ஜுலை 4-ந்தேதி சிக்காரில் துப்பாக்கிப் பிரயோகம் நடந்து பலர் உயிரிழக்க நேர்ந்ததற்காகக் கமிட்டி வருந்துகிறது. இறந்தவர்களின் குடும்பத்தாருக்கு அனுதாபம் காட்டுகிறது. இனி ஜெயப்பூர் அதிகாரிகள் சமரஸ பாவத்துடன் சிக்கார் வாசிகளுடன் நடந்துகொள்ள வேண்டுமென்றும், அப்போதுதான் சமஸ்தானத்துக்கும் ராவ் ராஜாவுக்கும் சிக்கார் வாசிகளுக்கும் அந்நியோந்நியம் அதிகமாகுமென்றும் கமிட்டி அபிப்பிராயப்படுகிறது.

காங்கிரஸ் தலைவர் ஸ்ரீஜத் சுபாஷ் சந்திரபோஸ் சமஷ்டிப் பிரச்னையைப்பற்றியும் அது சம்பந்தமாகப் பத்திரிகைகளில் நடந்த கடிதப் போக்குவரத்துகளைப் பற்றியும் ஸ்ரீமான் புலாபா... தேசாய், சர்தார் படேல், பா... ராஜேந்திர பிரசாத், மௌலான அபுல்கலாம் அஸாத் முதலியவர்களுடன் மனம் விட்டுக் கலந்து பேசினர். சமஷ்டி விஷயமாகக் காங்கிரஸ் எதிர்ப்பு சற்றும் குறைவுபடாது என்று பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கு அளித்த பேட்டியில் ராஷ்டிரபதி கூறினர்.

---

## மத்ய மாகாணத்தில் புதிய மந்திரி சபை

காரியக் கமிட்டி தீர்மானப்படி மத்ய மாகாணக் காங்கிரஸ் கட்சிக்கு ராஷ்டிரபதி போஸ் தலைமை வகிகக தேர்தல் நடைபெற்றது. அதில் ஸ்ரீ. பண்டித ரவிசங்கர சுக்லா அதிப்படியான ஓட்டுகள் பெற்று தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். புதிய மந்திரி சபையில் கீழ்க் கண்டவர்கள் மந்திரிகளாய் இருப்பார்கள். ஸ்ரீமான்கள் ரவிசங்கர சுக்லா, டி. பி. மிஸ்ரா, டி. கே. மேட்டா, எஸ். வி. கோகலே, எம். பி. கோல், வி. ஜே. பருக்கர்.

காங்கிரஸ் காரியக்கமிட்டியின் அநுமதியில்லாமல் டாக்டர் கரே அமைத்த மந்திரி சபை தொலைந்தது. கவர்னரும் அவர்களது ராஜிநாமாவை அங்கிகரித்துவிட்டார்.

கவர்னரால் டிஸ்மிஸ் செய்யப்பட்ட மூவரும் புதிய மந்திரி சபையில் யிருக்கிறார்கள்.

---

## சிதம்பரம் தாலூகா அரசியல் மகாநாடு

இம் மகாநாடு 31-7-38ல் புவனகிரியில் "ஜனசக்தி" ஆசிரியர் தோழர் ப. ஜீவானந்தம் தலைமையில் நடைபெறும்.

---

## நமது ஏஜெண்ட்

மாயவரம், குத்தாலம், ஆடுதுரை திருவிடமருதூர் ஆகிய ஊர்களுக்கு அவைகளின் பக்க கிராமங்களுக்கு, ஸ்ரீமான் கே. தியாகராஜன் (குத்தாலம்) உரிமை பெற்ற ஏஜெண்டாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

# சோவியத் யூனியனில் தொழிற்சங்க நடவடிக்கை

—(கே. முருகேசன்)—

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒரு கட்டிடத்திலிருக்கும் செடியை மற்றோர் கட்டிடத்திற்குக் கொண்டு போய் இன்ஸ்[illegible]டர் உத்தரவில்லாமல் நட[illegible]வுகூடாதென்றும், சுகாதார போர்டாரையும் கலக்க வேண்டுமென்றும்'' கூறப்பட்டிருக்கிறது.

* * * *

சோவியத் யூனியனில் தொழிற் சங்கங்கள், ஜன நாயகத்வ அஸ்திவாரத்தின் மேல் கட்டப் பட்டிருக்கின்றன. சகல தொழிற்சங்கங்களின், கமிட்டிகளுக்கும் கீழிருந்து மேல்வரை நேரடியாகவே உத்யோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். உத்யோகஸ்தர்களின் மேல் நம்பிக்கையில்லாவிட்டால், திரும்ப வந்துவிட வேண்டுமென்று எந்த நேரத்திலும் அங்கத்தினர்கள் தீர்மானித்து, அந்த உத்யோகஸ்தர்களை திரும்ப அழைக்க உரிமை இருக்கிறது. அதன்படியே நடந்தும் வருகிறது. தொழிற்சங்க கமிட்டிகளுக்கும், சகல தொழிற்சங்க முக்கிய கமிட்டிகளுக்கும் உத்யோகஸ்தர்கள் தேர்தலிலும், மகாநாட்டிற்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பும் தேர்தலிலும் ரகசிய ஓட்டுகள் மூலமாகவே காரியங்கள் நடந்தேறி வருகின்றன. பூரண மெஜாரிட்டி ஓட்டுகள் பெற்ற பிரதிநிதிகளே தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். எல்லாத் தேர்தல்களிலும் 100க்கு 50 பங்கிற்கு குறைவாக ஓட்டு பெறுவோர்கள்தேர்ந்தெடுக்கப்பட மாட்டார்கள்.

* * *

சமூக சேவைகளில் சிறந்த வேலைகளைச் செய்து வெற்றி பெற்றுவருகின்றன சோவியத் ரஷ்ய தொழிற்சங்கங்கள். 63 லக்ஷம் ரூபிள்கள் சமூக சேவைகளுக்கென்று 1938ம் வருஷ பட்ஜெட்டில் கண்டிருக்கிறது. தொழிலாளர்கள் தங்கு மிடங்களுக்கும், விளையாடு மிடங்களுக்கும், சுகாதார விடுதிகளுக்கும் 10 லக்ஷம் ரூபிள்களுக்கு மேல் தொழிற் சங்கங்கள் ஒதுக்கி வைத்திருக்கின்றன. இதனால் 30 லக்ஷம் தொழிலாளர்கள் சுகாதார விடுதிகளுக்கும், விளையாடுமிடங்களுக்கும், தங்குமிடங்களுக்கும் எந்தவித கட்டணமும் செலுத்தாமலே போக வசதி ஏற்பட்டிருக்கிறது.

* * *

1937ம் வருஷம் சோவியத் டிரேட் யூனியன்கள், 6756 தொழிற்சங்கக் கிளப்புகளை நடத்தியிருக்கின்றன. 4 கோடியே 20 லட்சம் புஸ்தகங்களைக் கொண்ட 13000 லைப்ரெரிகள் தொழிலாளர்கள் சங்கங்களுக்கு சொந்தமாக இருக்கின்றன. 30,000 வகுப்புகளை நடத்தியிருக்கிறார்கள். 9 லக்ஷம் மெம்பர்கள் வகுப்புகளில் கலந்து கொண்டிருக்கிறார்கள்.

சோவியத் ரஷ்யாவில் சோஷியலிஸ்டு சமூக அமைப்பின் சென்ற 20 வருஷ வளர்ச்சியில், வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிந்துவிட்டது. சகலருக்கும் 7 மணி நேர வேலை சட்டமாக்கப் பட்டிருக்கிறது. பல மடங்கு சம்பளம் உயர்ந்திருக்கிறது. சகலரும் வேலை செய்ய உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது; கல்வி பெற தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன; தள்ளாத கால உதவி முதலியனவைகள் சட்டமாக்கப் பட்டிருக்கின்றன. சோவியத் தொழிற் சங்கத்தின் உற்சாகமான கூட்டுறவால் எல்லாக் காரியங்களும் ஒழுங்காக நடைபெற்று வந்து கொண்டிருக்கின்றன.

* * *

சென்ற 20 வருஷ காலமாக சோவியத் தொழிற் சங்கங்கள் பெற்றுவரும் அனுபவத்தை, முதலாளித்வ கொடுமையின்கீழ் இருந்து கஷ்டப்படும் தொழிற் சங்கங்கள் கவனித்து, முதலாளித்வத்தையும் அதைப் படைத்துக்காக்கும் பாஸிஸ்டுசர்க்காரையும், ஏகாதிபத்ய சர்க்காரையும், பூர்ஷ்வா ஜனநாயக சர்க்காரையும் அடிபோடு கவிழ்த்தி, சோவியத் ஆட்சியை நிலை நிறுத்த முன்வர வேண்டும்.

சோவியத் யூனியனிலுள்ள தொழிற் சங்க இயக்கம் ஐக்கியத்தோடு இருந்து வருகிறது. சர்வதேச தொழிலாளர் இயக்கத்தோடு ஒன்று பட்டிருக்கிறது. சோவியத் தொழிலாளர் இயக்கம் எல்லா சந்தர்ப்பங்களிலும் சமயங்களிலும், முதலாளித் வநாடுகளில் போராடி வரும் தொழிலாளர்களிடத்தில், தங்கள் பிரிக்க முடியாத ஒற்றுமையைக் காட்டியே வந்திருக்[illegible] வருகிறது. முதலாளித்வ[illegible] ளிலுள்ள தொழிற் சங்க[illegible] சோவியத் ரஷ்யாவின் தொழிற் சங்கங்களுடன் ஐக்கியப்பட்டு, தொழிலாளர் வர்க்கப் போராட்டத்தை பலப்படுத்திக்கொண்டு போக முன்வர வேண்டும்.

சோவியத் ரஷ்யா நீடூழி வாழ்க !
உலகத் தொழிலாளர்களே
ஒன்று சேருங்கள் !

---



---

## பூர்ஷ்வா ஜனநாயகமும் தொழிலாளர் சர்வாதிகாரமும்

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

மாக இருக்கின்றது. தொழிலாளர் சர்வாதிகாரமோ பெரும்பான்மையோரால், ஒரு சிறு கும்பலை, மாற்றும் காலத்தில்(Transitional period) அடக்க ஏற்பட்டதாகும்.

ஆகவே, "சுத்த, ஜனநாயகம்" என்று பூர்ஷுவாக்களாலும், பெரும் பணக்காரர்களாலும் கூறப்படுவது, நாட்டில் கொந்தளித்து எழுந்து கொண்டிருக்கும் வர்க்க உணர்ச்சியை யடக்க செய்யப்படும் முதல்தர சூழ்ச்சி என அறிக.

மக்கள் அவ்வளவு பேருக்கும் ஆண் பெண், ஜாதி, மத, நிற வித்தியாசமின்றி சம உரிமை வழங்கப்படுமென்று பூர்ஷுவா ஜனநாயகம் முழங்குகிறது. ஆனால் கிரியாம்சையில் செய்யப்படுவதில்லை. இருக்கும் சமூக அமைப்பை அப்படியே வைத்துக் கொண்டு, செய்யவும் முடியாது. மேற் கூறிய உரிமை இன்று சோவியத் ஆட்சியில் வழங்கப்படுகின்றது. இன்னும் தெளிவாகக் கூறினால் தொழிலாளர் சர்வாதிகாரத்தின்கீழ் தாராளமாக வழங்கப்படுகிறது மேற் கூறிய உரிமை.

இவ்வளவும் அரசியல் அதிகாரம் கிடைத்த பின்பு என அறிக.

"தொழிலாள சர்வாதிகாரமானது புதிய நிலைமைக்குகந்த, வர்க்கப் போராட்டத்தின் தொடர்ச்சி" (Stalin)

---

## சங்கரன்கோவில் நெசவுத் தொழிலாளர் வெற்றி

இந்நகரிலுள்ள சுமார் 5000 கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் முதலாளிமார்களால் முன்னறிவிப்பின்றி கூலி குறைக்கப்பட்டதினிமித்தம் 21-7-38 முதல் 23-7-38 முடிய 3 நாள் பூரண வேலை நிறுத்தம் செய்து வேலை நிறுத்தச் செய்தியைக் கனம் பிரதம மந்திரி, தொழில் மந்திரி, திருநெல்வேலி-ஜில்லா கலெக்டர் முதலியோர்களுக்கு தந்திமூலம் அறிவித்திருந்தார்கள். ஜில்லா கலெக்டர் அவர்கள் மூலமாகத் தந்திச் செய்தி கிடைத்ததும். கோவில்பட்டி டிவிஷனல் ஆபீஸர் அவர்கள் நெசவுத் தொழிலாளர் சங்க உத்தியோகஸ்தர்களான சங்கத் தலைவர் தர்மலிங்க முதலியார், காரியதரிசி திருவுடையான் முதலியார் ஆகியோர்களையும், அருப்புக்கோட்டை கைத்தறி நெசவுத் தொழிலாளர் சங்கத் தலைவர் சோமசுந்தரம் அவர்களையும் அழைத்து வேலை நிறுத்தத்தின் காரணத்தை விசாரித்துக் கொண்டபின், முதலாளி மார்களுள் அம்பா சமுத்திரம் சங்கர சுப்பையாமுதலியார் உள்ளிட்ட பலரை அழைத்துக் கூலி குறைத்ததின் காரணத்தைத் தெரிந்து கொண்டதின் பின், முதலாளி மார்கள் கூலியைக் குறைக்காமல் பழைய கூலியையே தொழில்ாளர்களுக்கு கொடுக்கவேண்டும், தொழிலாளிகள் முதலாளி மார்களுடன் சிநேக பான்மையுடன் நடந்து கொள்ள வேண்டு மென்றும் சமரசம் செய்துவைத்து தொழிலாளர்கள் வேலைக்குச் செல்லும்படி ஆக்ஞாபித்தார்கள். விசாரணையின் போது கனம் தாசில்தார் அவர்களும் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் அவர்களும் பிரசன்னமாயிருந்தார்கள். வேலை நிறுத்தத்தை அமைதியுடன் அஹிம்சா தர்ம வழியைப் பின்பற்றி வெற்றிகரமாய் முடித்துக்கொடுத்த பெருமை இந்நகர் நெசவுத் தொழிலாளர் சங்க உத்தியோகஸ்தர்களையும், அருப்புக்கோட்டை நெசவுத் தொழிலாளர் சங்கத் தலைவரையும் சார்ந்ததாகும்.

---

## புதுச்சேரி கவர்னர் திருப்பி அழைக்கப்பட்டார்

சில தினங்களாக புதுச்சேரியில் நடைபெறும் அடக்கு முறையின் காரணமாக பிரஞ்சிந்திய கவர்னர் கனம் குரோசிக்யாவை உடனே திரும்பி வரும்படி பிராஞ்சு கலோனியல் மந்திரி கனம் மாந்தேல் உத்தரவு பிறப்பித்திருப்பதாகத் தெரிகிறது.

கவர்னர் குரோசிக்யா ஆகஸ்டு மாதம் 8ம் தேதி போர்த்தோஸ் என்ற கப்பலில் கொழும்பு வழியாகப் பிரான்ஸிற்கு பிரயாணமாவார்.

# கோவை நடப்பு

## (நேரில் கண்டோன்)

அடக்க முடியாத அட்டகாசமும், பொறுக்க முடியாத போக்கிரித்தனமும், சின்னலும் தொல்லையும் அடுத்தடுத்து வந்தபடியால் தான் தொழிலாளர்கள் கோவையில் தொடுத்தனர் வேலை நிறுத்தம். கோரிக்கைகள் பல விடுத்து கோர்ட்டும் நடந்தது. பற்பல குறைகள் பஞ்சாலையில் இருப்பதை முதலாளிகள் மறுத்தும் கோர்ட்டின் அறிக்கை உண்டு என பறை சாற்றிற்று. சுரண்டுதலையே தொழிலாகக் கொண்ட முதலாளிகள் கோர்ட்டின் தீர்ப்பு ஓர் தலைச் சார்பு என்று எடுத்தனர் காவடி, ஏகினர் தொழிற் மந்திரி கனம் வி.வி. கிரியிடம் மில்லில் பல நஷ்டங்கள் ஏற்பட்டு விட்டது -விடுகின்றது என்று நீலிக் கண்ணீர் வடித்துக் கொண்டு மறு விசாரணை வேண்டுமென்று விவாதம் செய்தனர் கோவை முதலாளிகள். இதற்கும் ஓப்பினர் தொழிலாளப் பிரதிநிதிகள். மிஸ்டர் ஸ்ட்ராத்தி வந்தார். பரிசிலனை செய்தார். கோர்ட்டின் தீர்ப்பை மிஸ்டர் ஸ்ட்ராத்தித் தழுவி எழுதினாலும் எழுதுவார் என்று எண்ணி தொழிலாளர்கள் மேல் பழி சுமத்த முதலாளிகள் மாயா ஜாலம் செய்கிறார்கள்.

காய்ச்சல், ஜுரம், கால்வலி, மண்டை இடி மனதை உடைத்தாலும், டாக்டர் சர்டிபிகேட் சமர்ப்பித்தாலும் லீவு கொடுக்க முடியாது என்று முதலாளி வர்க்கம் முரட்டுத்தனம் செய்வதேன்?

### காட்டன்மில் கதவடைப்பு

வேலை நிறுத்தம் ஏற்பட வேண்டுமென்று முதலாளிகள் கச்சையை வரிந்து கட்டிக் கொண்டிருக்கிறார்கள். வேலைக்கு வரத் தயார் என்று தொழிலாளர்கள் கதவண்டை வந்தால் "மறு உத்திரவு வரும் வரை மில் மூடப்படு"மென்று முரட்டுத்தனம் செய்து கதவடைப்புச் செய்தார் காட்டன்மில் முதலாளிகள்.

### ராதாகிருஷ்ணமில் ஸ்ட்ரைக்

தொழிலாளர்கள் மேல் குற்றத்தைச் சாற்ற கூடாது. பலரை அகாரணமாக விலக்கி அல்லல் படுத்துகிற முறையில் கோவையில் முதலாளிகள் இறங்கி இருக்கிறார்கள். உற்பத்தி கம்மி என்று உழைப்பவர் பலரை உந்தினர் ராதாகிருஷ்ண மில்காரர். சங்கத்தார் பலமுறை கேட்டும், பாசாங்கு நாட்டியம் நடித்தி காலிகள் பலரை ஏவி கூத்தாடச் செய்து கும்மாளம் கொட்டுகிறது முதலாளித்வம் கோவையில்.

### போதுஜன சேவா சங்கமா போக்கிரிகள் சங்கமா?

பொதுஜன சேவா சங்கமென போக்கிரிகள் பலரைக்கொண்டு நிறுவி வேலை நிறுத்தத்தை உடைப்போம் என்று வீதியில் ஊர்வலமாக வந்து வெற்றிக் கொண்டாடமும் பீளமேட்டில் நடந்தது. இக்காட்சியை எங்கும் யான் கண்டதில்லை இதற்கு முன் கள்ளும், சாராயமும் கரை புரண்டோடும் காக்கிச் சட்டைக் கயவர்கள் கூட்டம் பொது ஜனங்களுக்குச் சேவை செய்ய முன்வருவதாகப் பாசாங்கு செய்து முரட்டுத்தனமாக முழக்குவதெல்லாம் முதலாளித்வத்தின் மூடு மந்திரம் என்பது வெளிப்படை.

### போலீஸார் மவுனம் சாதிப்பதேன்?

அமை தியுடனிருக்கும் தொழிலாளர் கூட்டத்தைக் கற்களால் அடித்துத் துரத்த ஆவேசம் கொண்டு அலைகிறது அறிவற்ற அரக்கர்போன்ற முதலாளித்வ லஞ்சப் பேய்க் கூட்டம்.

கல்லை எறிந்து காலியை, ஒற்றைக் கண்ணில்லாத கயவனைக் கையும்—மெய்யுமாகப் பிடித்துக் கொடுத்தும் போலீஸார் மவுனம் சாதிப்பதேன்? போலீஸார் (பெரிய உத்தியோகஸ்தர் உள்பட) மறியல் செய்யும் தொழிலாளத் தொண்டர்களைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளி காலால் உதைப்பது லஞ்சத்தின் லீலா விநோதமா என்ன?

காங்கிரஸ் சர்க்கார் நடக்குமின்று போலீஸ் தர்பார் தலைகால் தெரியாது ஜனங்களுக்கு விரோதமாகத் தாண்டவமாடுவது தான் எனக்கு வியப்பைக் கொடுக்கின்றது.

அரை டிக்கட், கால் டிக்கட் போர் வழிகளை அடக்கப் போலீஸ்காரர் முற்படாது—அமைதியுடனிருக்கும் தொழிலாளர்கள்மேல் சீறிவிழும் காட்சி என்று ஒழியுமோ யான் அறியேன் பகல் இரவென்று பாராது பாட்டாளி மக்களின் நலம் கோரி உழைக்கும் தோழர்களுக்கு எமது நன்றி முதலாளித்வம் வீழ்க! லஞ்சப் பேய் ஒழிக!!

---

## தஞ்சை ஜில்லா விவசாயிகள் மகாநாடு

இம்மகாநாடு "ஜன சக்தி" ஆசிரியர் தோழர் ப. ஜீவானந்தம் தலைமையில் முத்துப்பேட்டையில் நடைபெற்றது. மகாநாட்டை தோழர் பி. ராமமூர்த்தி திறந்து வைத்தார். தோழர் டி. என். ராமச்சந்திரன் செங்கொடியை ஏற்றினார்.

## ரிக்ஷா தொழிலாளர் பொதுக்கூட்டம்

---

திங்கட் கிழமை (25-7-38) மாலை 6மணிக்கு நேப்பியர் பார்க்கில் தோழர் வி. எஸ். சோமசுந்தரம் தலைமையில் ரிக்ஷாத் தொழிலாளர்களின் பொதுக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. கூட்டத்தில் தோழர்கள் வி. பி. இளங்கோ பி. ஸ்ரீனிவாச ராவ், ஜெயசிங் பாட்யா மு[illegible]யோர்கள் சங்கம் அமைத்[illegible]காள்ள வேண்டியதின் [illegible]தைப் பற்றியும், போலீஸாரால் ரிக்ஷாவாலாக்களுக்கு ஏற்படும் தொல்லைகளைப் பற்றியும் பிரசங்கம் செய்தனர். கூட்டத்தில் அநேக போலீஸ்காரர்களும் (ரிக்ஷாக்காரர்களின் பில்லை பிடுங்குகிறவர்கள்) ஸி. ஐ. டிகளும் வந்திருந்தனர். அதனால் சில தொழிலாளர்கள் கூட்டத்திற்கு வருவதற்குக்கூட மலைத்து மலைத்து ஒதுங்கி நின்றனர். கூட்டத்திலிருந்த அநேக பொதுஜனங்களும், தொழிலாளர்களும் இவர்களுக்கு இங்கு வேலை என்ன? இதைக் காங்கிரஸ் மந்திரிகள் ஏன் நிறுத்தக்கூடாதென்று பேசிக் கொண்டனர்.

---

## வாலிபர் சங்கப் பொதுக் கூட்டம்

திருவாரூர் விஜயபுரம் தீவிர தேசீய வாலிபர் சங்கத்தின் ஆதரவில் 25-ந் தேதி திங்கட்கிழமை இரவு விஜயபுரம் ரேணுகாதேவி ஆலயத்தின் எதிரே, சங்கக் காரியதரிசி தோழர் என். எஸ். பக்கிரிசாமி தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது. அதுகாலை தோழர்கள் பி. ராமமூர்த்தி, டி என். ராமச்சந்திரன், குமாரசாமி, ஆகியோர் ஜனநாயக ஆட்சியின் அவசியத்தைப்பற்றியும் சமஷ்டியை எதிர்க்க வேண்டிய முக்கியத்தைப்பற்றியும் விரிவுரை நிகழ்த்தினார்கள்.

---

JANA SHAKTI

# ஜனசக்தி

(சனிக்கிழமைதோறும் வெளிவரும்)

மலேயா :—வருடச் சந்தா ரூ. 6. தனிப்பிரதி 2 அணா.

பர்மா .—வருடச் சந்தா ரூ. 4—8—0. தனிப்பிரதி 0—1—6 அணா.

## கிருஷிகர் தலைவர் அறிக்கை

கயா ஜில்லா சுற்றுப் பிரயாணத்திற்குப் பின், கீழ்க்கண்ட அறிக்கையை, அகில இந்தியக் கிருஷிகர் சபைத் தலைவர் தோமூர் சகஜானந்த சரஸ்வதி பத்திரிகைக்கு அனுப்பியுள்ளார்.

இதற்கு முன் நான் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் கயா ஜில்லாவில் கிருஷிகர்கள் கொடுமைகளுக்கு ஆளாகிவரும் விபரத்தைக் குறிப்பிட்டிருந்தேன். (இந்த அறிக்கை 9-7-38ந் தேதி ஜனசக்தி பத்திரிகையில் வெளிவந்திருக்கிறது). கிருஷிகர்களைக் காப்பாற்றுவோர் என்று கூறி வருவோரின் கவனக் குறைவால் கிருஷிகர்களுக்கு ஏற்பட்டுவரும் தொந்தரவும், தொல்லைகளும் மன்னிக்கவே முடியாதவைகளாய் இருக்கின்றன. நான் நபினகர் தாலூகாவை சுற்றிப் பார்த்தபோது திடுக்கிட்டுப் போனேன். சுமார் 40 கிராமங்களில் குடி தண்ணீர் வசதியேயில்லாதபடியால், பல மைல்களுக்கு அப்பாலிருந்து மண்பானையில் தண்ணீரைத் தலையிலும், இடுப்பிலும் சுமந்து வருகிறார்கள். மழைக்குப் பிறகு நான், சோன்பார்சா என்ற கிராமத்திற்கு போய் இருந்தேன். இந்த கிராமத்தில் ரஜபுத்திரர்கள் வசிக்கிறார்கள். ஒரு மைல் தூரத்திற்கு அப்பாலுள்ள ஓர் கிணற்றிலிருந்து தண்ணீர் கொண்டுவரப்படும் காட்சியைக் கண்டேன். இது போன்றே பல கிராமங்களின் நிலைமை. இந்தக் கிராமங்களும், ஔரங்கபாட்டின் ஓர் பிரிவுமே நமது நிதி மந்திரி தேர்தலுக்கு நின்ற தொகுதியாகும். நமது நிதி மந்திரி பிறந்த இடமும் இதுவேதான். கிருஷிகர்கள் தண்ணீர் வசதி செய்யக் கூடாதா என்று அவர்கள் இரு கரங்களையும் உயர்த்தி என்னிடம் கேட்டபோது, நான் வெட்கித் தலைகுனிய நேரிட்டது.

நூற்றுக் கணக்கான கிருஷிகர்கள் செக்ஷன் 107, 108பிரிவின் கீழ் சென்ற ஒரு வருஷத்தில் ஜெயிலில் அடைக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்களில் இருவர் ஜெயிலில் இறந்துபோய் இருக்கிறார்கள். தங்கள் நில உரிமைக்காக போராடியதே இவர்கள் செய்த குற்றங்கள்!

### கிராமங்களில் கூர்கா சோல்ஜர்கள்

8 வாரங்களுக்கு மேல் ஓர் ஸ்பெஷல் ஆபீஸரின் கீழ் கூர்கா சோல்ஜர்கள் ஆர்வாலிலும், ஜகானபாடிலும் வீணாக இருந்துவருகிறார்கள். அவர்களை விசாரித்ததில், அவர்களுக்கே எதற்காக வந்தோம் என்கிற விஷயம் தெரியவில்லை. நான் கயாவிற்குப்புறப்படுமுன், எதற்காக அனாவசியமாக இங்கு கூர்கா சோல்ஜர்கள் இருக்க வேண்டுமென்று விசாரித்தபோது, சில மந்திரிகளுக்கு தெரிந்தவர்களும், ஜமீன்தார்களும் கயாவில் சட்டமும் அமைதியும் மறையவே, அவசரமாக கூர்கா சோல்ஜர்கள் வர நேரிட்டது என்று கூறினார்கள்.

வீணாக இந்த சோல்ஜர்கள் இங்கு இருப்பதாலும், அவர்கள் அடிக்கடி ஊரைச் சுற்றிக்கொண்டே வருவதையும் கண்டு கிருஷிகர்கள் ஆத்திரப் படுகின்றனர். இந்த மாதிரிக் காரியங்கள் தொடர்ந்தாற்போல் நடந்து வந்தால் கிருஷிகர்கள் காங்கிரஸ் மந்திரி சபையிடம் நம்பிக்கை இழக்க நேரிடலாம்! நாங்கள் காங்கிரஸில் மெம்பர்களாக மாட்டோமென்றுகூட சிலர் என்னிடம் சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். அவர்கள் கோபத்திற்கு முக்கிய காரணங்கள்: அடி, உதை, ஜெயில், இருக்கிற நிலத்தையும் பறிகொடுத்து நிற்பது போன்ற அவர்கள் கஷ்டங்களினிடையே ஜமீன்தார்கள் திரும்பத் திரும்ப பயமுறுத்தி வருவதையும் கண்டு ஆத்திரப்பட்டு நிற்கிற வேளையில், புண்ணில் வேல் பாய்ந்த மாதிரி இந்த கூர்கா சோல்ஜர்களைக் கண்டவுடன் அவர்கள் ஆத்திரம் இன்றுஎல்லை கடந்து நிற்கிறது. இதற்கிடையே லஞ்சத்தைப் பெற்றுக் கொண்டு போலீஸ் கிருஷிகர் கூட்டங்களுக்கு வருவதும் திட்டுவதும் வழக்கமாய்ப் போய்விட்டது. கூர்க்கா சோல்ஜர்களின் ஸ்பெஷல் ஆபீஸர்கூட பக்காசட் நிலத்தை விட்டு ஓடிப்போய் விடுங்கள்—இல்லாவிட்டால் சுட்டுத் தள்ளி விடுவேன் என்று பயமுறுத்தியிருக்கிறார். நான் பேசிய 12 பொதுக் கூட்டங்களிலும் ஆயிரக் கணக்கான கிருஷிகர்கள் வந்திருந்தனர். பிரதி தினமும் பலத்த மழையாய் இருந்துங்கூட, உழுதல், விதை தெளித்தல், நாற்று நடுதல் போன்ற வேலைகள் ஒரு பக்கம் இருந்துங்கூட சுமார் 50,000 கிருஷிகர்கள் பொதுக் கூட்டங்களுக்கு விஜயம் செய்திருக்கின்றனர். கயா கிருஷிகர்களின் உயிரும் உடலுமாகக் கருதப்பட்டு வரும் பண்டிதர் ஜடுநந்தன் சர்மா என்னுடன் வந்து கூட்டங்களில் சொற்பொழிவாற்றியுள்ளார். நாங்கள் பகாசட் நிலங்களின் உரிமைகளுக்காகப் போராடிவரும் கிருஷிகர்களைச் சமாதானமாகவும் அமைதியாகவுமே காரியங்களை நடத்திப்போக வேண்டுமென்று உபதேசித்து வந்துள்ளோம். அதே போது அவர்கள் போராட்டத்தில் சிறிதுகூட விட்டுக்கொடுக்காமல் போராடி வரவேண்டுமென்றும் கூறியுள்ளோம். ஆத்திரத்தைப் பொறுக்காது காரியங்களைச் செய்ய முற்படுவதால் ஏற்படும் விளைவைக் கிருஷிகர்களுக்கு எடுத்துக்காட்டியுள்ளோம். இதை விளக்கியே என் கையொப்பமிட்ட பதினாயிரம் துண்டு பிரசாரங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. கிருஷிகர்கள் அவர்கள் உரிமைகளைப் பெறுவதில் முன் இருந்ததைவிட உறுதியாகவும் தீவிரமாகவும், கட்டுப்பாடாகவும் இருக்கிறார்கள் என்பதே என் முடிவு. எரிகிற நெருப்பில் எண்ணெயை ஊற்றுவதால் விளையும் பயனைப்போல், சமீபத்தில் ஏற்பட்ட காங்கிரஸ்-ஜமீன்தார் ஒப்பந்தம் அதிருப்தி அடைந்திருக்கும் கிருஷிகர்களிடையே ஆத்திரத்தைக் கிளப்பிவிட்டிருக்கிறது.

* * *

இந்தியாவின் மற்ற மாகாணங்களில் கிருஷிகர்கள் கிளர்ச்சி செய்வது போலவே, சென்ற 5 வருட காலமாக எல்லைப்புற கிருஷிகர்கள் குறிப்பாக தைர்யசாலிகளான காலாடிர் கிருஷிகர்கள் தங்கள் பயிர்களுக்காகவும் நிலங்களுக்காகவும் போராடி வருகிறார்கள். பொருளாதார மந்தத்தால், விலை வாசிகள் குறைந்து போகவே, கிருஷிகர்கள், டோரு நவாபிற்கு செலுத்த வேண்டிய பாக்கியை கிருஷிகர்கள் செலுத்த சக்தியற்றவர்களாயிருந்தனர். சென்ற மாதம் இந்தப் போராட்டம் கோர ரூபத்தில் வெளிப்பட்டது. நவாப் ஏஜண்டுகள், ஆயுதந் தாங்கிய போலீஸ் உதவியுடன், கிராமங்களில் புகுந்து பலதடவை கொள்ளை அடித்ததோடு, பலவந்தமாக, கிருஷிக மக்களை அந்தந்த விடங்களிலிருந்து விரட்டி அடித்தனர்.

இந்த அக்ரமங்களுக்கிடையே 18 பேர்கள் கைது செய்யப்பட்டு 1 வருஷம் கடுங்காவல் தண்டனை பெற்று பெஷாவர் ஜெயிலில் இருந்து வருகிறார்கள். பொதுக் கூட்டங்கள் பிரதி தினமும் நடைபெற்று வருகின்றன.

நவாபிற்கு எதிரிடையாக சத்யாக்கிரக போராட்டத்தை நடத்தவேண்டுமென்று 4-ந்தேதி கிருஷிகர்கள் கூடி தீர்மானித்தார்கள். முதல்நாள் போராட்டமான 8ந்தேதி யன்று தங்கள் கட்டுப்பாட்டையும் ஒற்றுமையையும் சகலருக்கும் எடுத்துக் காண்பிக்க, ஓர் பிரமாண்டமான ஊர்வல ஆர்பாட்டத்தை நடத்தினார்கள். நூறு வருஷங்களுக்கு மேல் நிலத்தை உழுது பயிரிட்டு வரும் கிருஷிகர்களுடைய நிலங்களை கைப்பற்றிக்கொண்டு, கிருஷிகர்களை துரத்தியடிக்கப் போகிறோமென்று கூறியிருந்த போலீசையும், நவாப் கையாட்களையும் காணோம்! 8-ந்தேதி காலை ஆயிரக்கணக்கான கிருஷிகர்களும், செஞ்சட்டையினரும் சிகப்பு கொடிகளுடன், கிருஷிகர்கள் சுலோகங்களைச் சொல்லிக் கொண்டு, பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களுக்கு நேரே சென்று, அந்நிலங்களை 50 கலப்பைகளைக் கொண்டு உழுதார்கள்.

Printed by R. Balan at Jesu Press, Edited and Published by P. Jeevanandan, 270, Triplicane High Road, Madras.